கழக வெளியீடு: ருடஅ

# சென்னைத் தமிழ்ப் புலவர்கள்

[முதற் புத்தகம்]


ஆசிரியர்:

மணி. திருநாவுக்கரசு முதலியார்

அவர்கள் இளவல்

மணி. திருஞானசம்பந்த முதலியார்



:: திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி :: சென்னை 1.

# பதிப்புரை

பண்டுதொட்டு வழிவழி வாழ்ந்த புலவர்களின் வரலாறுகளைப் புனைவின்றி எழுதி வெளியிடுவதில், மேல்நாட்டார் மிக்க அவாவுள்ளவர்களாக இருக்கின்றனர். அதன் பயனாக எக்காலத்துப் புலவர்களாயினும், அன்னாரின் உண்மை வாழ்க்கை வரலாறுகளை அவர்கள் அறிய முடிகின்றது. மேலும், புலவர் பெருமக்களின் உண்மை வாழ்க்கை வரலாறுகள் மொழிவளர்ச்சிக்கும், மக்கள், நாடு முன்னேற்றங்கட்கும் இன்றியமையாததாகும் என்பதே அவர்தம் கோட்பாடு.

நிற்க. நம் தமிழகத்தில் வாழ்ந்த திருவள்ளுவர், நக்கீரர் முதலிய புலவர் பலரின் வாழ்க்கை வரலாறுகள், புனைந்துரையோடு காலத்துக்கேற்றவாறு அவர்தம் பெருமையை எடுத்துரைத்து வரையப்பட்டிருக்கின்றன. அவற்றின் துணைகொண்டு அன்னாரின் உண்மையான வாழ்க்கை வரலாறுகளை நாம் தெள்ளிதின் அறிதற்கரிய நிலையிலிருக்கின்றோம். எனவே, மேல்நாட்டாரைப் பின்பற்றி, இக்காலப் புலவர் சிலரின் வாழ்க்கை வரலாறுகளையாவது, கற்பனையும் புனைவுமின்றி, உள்ளது உள்ளபடியே எழுதுவித்து, வெளியிடவேண்டியது நமது இன்றியமையாத கடமையும் நேர்மையுமாகும்.

அதன்பொருட்டுச் சென்னை நகரில் வாழ்ந்த, **பூவை. கலியாணசுந்தர முதலியார், கா. நமசிவாய முதலியார், மணி. திருநாவுக்கரசு முதலியார்** முதலிய முப்பெரும் புலவரின் வாழ்க்கை வரலாறுகளைச் செவ்விதின் தொகுத்துச் '**சென்னைத் தமிழ்ப்புலவர்கள்**' என்ற நூலை முதற் புத்தகமாக வெளியிடுகின்றோம். இந்நூலை எம் வேண்டுகோட்கிணங்கி எளிய

நடையில் எழுதித்தந்த திருவாளர் மணி. திருஞான சம்பந்த முதலியார் அவர்கட்கு எம் நன்றி உரித்தாகும். சென்னையில் வாழ்ந்த ஏனைய புலவர் பெருமக்களின் வரலாறுகளும் தொடர்பாய் வெளியிடுவதற்கு முயற்சிசெய்து வருகின்றோம்.

அன்றியும், இவ்வரிசையைப் பின்பற்றித் தமிழகத்திலுள்ள ஒவ்வொரு மாவட்டத்திலும் வாழ்ந்த தமிழ்ப்புலவர்களின் வாழ்க்கை வரலாறுகளையும் தனித்தனியே தொகுத்து வெளியிடவேண்டுமென்ற கருத்துடையோம். விரைவில் எங்கள் கருத்தை நிறைவேற்றித் தந்தருளும்படி, கருத்தறிந்து முடிப்பான் தன்னை வழுத்துவோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை

தமிழ்நாட்டில் பல அரும்பெரும்புலவர்கள் வாழ்ந்தனர். அவர்களின் வாழ்க்கை வரலாறுகள் உள்ளவாறு எழுதப்படவில்லை. இது தமிழ்மக்களின் தவறே என்பதில் ஐயமில்லை. மேனாட்டார் தமது நாட்டின் புலவர்கள் வரலாறுகளை அவ்வப்போது ஒழுங்காக எழுதித் தமது நாட்டு மக்களுக்கு நற்றொண்டு ஆற்றியும், ஆற்றிக்கொண்டும் வருகின்றனர்.

நம் தமிழ்நாட்டில் புலவர்களின் வரலாறுகள் இல்லாக் குறை பெருங்குறையாகவே இருந்து வருகிறது. ஏனைய கதைகள், புராணங்கள், நூல்கள் முதலியவற்றைக் காட்டினும், புலவர்கள், பேரறிவாளர்கள், பொதுநலத் தொண்டர்கள் முதலியோர் வரலாறுகளை வாசிப்பதால், மக்களுக்கு நல்லுணர்ச்சியும், நல்லறிவும், ஊக்கமும், உவகையும் மிகுதியாக உண்டாகும் என்பதில் ஐயமில்லை.

நம் தமிழர்கள், புலவர்களின் வரலாறுகளை உள்ளவாறு எழுதாமல், பொய்க்கதைகளையும், பொருந்தாக் கற்பனைகளையும் சேர்த்து, அவ்வரலாறுகளைப் பயனற்றனவாகச் செய்துவிட்டார்கள். புலவர்களின் பெருமையை உயர்த்த அவ்வாறு எழுதுதல் பண்டைக்காலத்து வழக்கம். அம்மனப்பான்மை தற்போது மக்களுக்கு அறவே ஒழிந்துவிட்டது. ஆதலால், உள்ளதை உள்ளவாறு எழுதுவதுதான் இக்காலத்தில் பொருத்தமான செயலாகக் காணப்படுகிறது.

தமிழ்ப்புலவர்களில் தலைசிறந்த புலவராக விளங்கிய திருவள்ளுவரின் உண்மைவரலாறே இதுகாறும் ஒருவருக்கும் விளங்கவில்லை. ஔவையார், கம்பர் முதலியோர் வரலாறுகளும் சரியாகத் தெரியவில்லை. எப்புலவர் வரலாறும் உள்ளவாறு எழுதப்படவில்லை. இது தமிழ்மக்களின் புண்ணியக் குறைவே என்பதில் ஐயமில்லை.

ஆதலால், அண்மையிலிருந்த தமிழ்ப்புலவர்களின் உண்மை வரலாறுகளையேனும் இயன்றவரையில் எழுத நம் தமிழறிஞர்கள் முன்வருவார்கள் என நம்பி, நான் சென்னையில் அண்மையிலிருந்த மூன்று அரும்பெரும்புலவர்களின் வாழ்க்கை வரலாறுகளைச் சுருக்கமாக எழுதத் துணிந்தேன். சென்னைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் ஆட்சியாளர், திருவாளர் வ. சுப்பையா பிள்ளை அவர்களும் என் கருத்தையே கொண்டவர்களாதலால், என்னை அத்துறையில் உழைக்குமாறு ஊக்கினார்கள். அவர்கள் விருப்பின்படியே இச்சிறு நூலை எழுதினேன். இதனை எழுதுதற்கண் பூவை - கலியாணசுந்தரரின் வரலாறு பற்றிப் பல அரிய குறிப்புக்களையும், பல அரிய கருத்துக்களையும் என் கெழுதகை நண்பர், திருவாளர். வித்துவான் - பாரிப்பாக்கம் - கண்ணப்ப முதலியார் அவர்கள் எனக்கு வழங்கி எனக்கும், தமிழுலகிற்கும் பேருதவி புரிந்தார்கள். கைம்மாறு கருதாமல் அப்பெரியார் புரிந்த இந் நற்றொண்டை நான் என்றும் மறவேன். அவர்பால் என்றும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன். தமிழ் மக்களின் நலத்தையே உறமாகக் கொண்டு, பற்பல தமிழ் நூல்களைப் புது முறையில் பல அழகுகள் மிளிர அச்சிடும், கழகத்தார்க்கு என்றும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

இன்னும் சென்னையில் வாழ்ந்த சில புலவர்களின் வரலாறுகளைத் தொடர்ந்து என்னாலியன்றவரையில் எழுத எண்ணியுள்ளேன். இம்முயற்சி நிறைவேறுமாறு எல்லாம்வல்ல முழுமுதற் செழும் பொருளாகிய இறைவன் பூங்கழல்களைப் போற்றுகின்றேன்.

இராதா சம்பந்த நிலையம்,<br>174, போர்ச்சுகீஸ் சர்ச் தெரு,<br>சென்னை, 1. 20—4—1950.

இங்ஙனம்<br>மணி. திருஞானசம்பந்தன்.

## பொருளடக்கம்

## மணி. திருநாவுக்கரசு முதலியார்



அஷ்டாவதானம்
பூவை-கலியாணசுந்தர முதலியார்

சித்தாந்த சரபம்—அட்டாவதானம்

# 1. பூவை கலியாணசுந்தர முதலியார்



## க. இளமையும் கல்வியும்

தொண்டைநாட்டிலே புத்தவேடு என்னும் ஒரு சிற்றூர் உண்டு. அவ்வூர்க்கண் வாயிலார் நாயனார் பரம்பரையில், துளுவவேளாளர் குலத்தில் சுவாமிநாத முதலியார் என்பவர் தோன்றினார். அவர் செந்தமிழும், ஆங்கிலமும், இந்துஸ்தானியும் நன்கு கற்றவர். அவர் அறிவின் மாண்பாலும், முயற்சியின் நலத்தாலும், ஐதராபாக்கத்தில் அமைச்சியல் தொழில் பூண்டார். திங்கள் ஒன்றிற்கு ஓர் ஆயிரம் ரூபாவரை ஊதியம் பெற்றார். அவர் பேரர் அண்ணுசுவாமி முதலியார் என்பவர் வித்துவான், தாண்டவராய முதலியாரிடம் தமிழ் அறிவு பெற்றார். அவர் தொழில் காரணமாகப் பர்மா, சீனம் முதலிய நாடுகளுக்குச் சென்றார். சில ஆண்டுகள் வெளிநாட்டு வாழ்க்கையை மேற்கொண்டிருந்த பின்னர் சென்னையைச் சார்ந்த பரங்கிமலையில் உண்ணுமுலை என்னும் அம்மையைத் தம் வாழ்க்கைத் துணைவியாகப்பெற்று, இல்லறம் நிகழ்த்துவாராயினர்.

அண்ணுசுவாமி முதலியாரின் பேற்றின் பயனாக, 1854-ம் ஆண்டு, மேத்திங்கள், 10-ம் நாள், புதன்கிழமையன்று, அவர்தம் செல்வப் புதல்வராகக் கலியாணசுந்தரர்

தோன்றினார். அவருக்குப்பின் வடிவாம்பிகை அம்மை, திரிபுரசுந்தரி அம்மை, மாணிக்கம் அம்மை, புட்பவல்லி அம்மை எனப் பெண்மக்கள் நால்வர் தோன்றினர். அவர் தந்தையார் பரங்கிமலையிலிருந்து பூவிருந்தவல்லிக்குக் குடியேறினார். கலியாணசுந்தரர் அவ்வூரிலேதான் நற்றமிழ் கற்கத் துவங்கினார். அவருக்கு நுட்ப அறிவும், மனப் பாடம் செய்யும் வன்மையும் பெரிதும் உண்டு. ஆதலால், அவர் ஆசிரியர் அவரிடத்தில் பேரன்பு பூண்டார். அவர் கலியாணசுந்தரர்க்கு அந்தாதி, கலம்பகம், பிள்ளைத்தமிழ், நிகண்டு முதலிய தமிழ் நூல்கள் கற்பித்தார். அப்போதே அவர் பாவியற்றும் வன்மை பெற்றார். அங்குத் திருக் கோயில்கொண்ட சுந்தரவிநாயகர்மீது,

"வாத்தியார் சொல்லிவைக்கும் வண்மையுள பாடமெலாம்
நேர்த்தியா யென்மனதி னேர்மையுடன்—பூர்த்தியுறச்
சுந்தரவி நாயகனே தூய்மைபெற நின்றுளொன்
சிந்தையினி லேயிருக்கச் செய்"

என்ற வெண்பாவை இயற்றினார். அதை நாடோறும் பள்ளிக்குச் செல்லுகையில், ஆலயத்தின் முன்நின்று ஓதுவார்; இறைவன் இன்ப அன்பில் திளைப்பார். அவர் தந்தையார் திருமுருகாற்றுப்படையை நாடோறும் ஓதி வருமாறு பணித்தார். சுந்தரர் தம் தந்தையார் சொல்லை மந்திரமெனப்போற்றி, அப்பாடலை நாடோறும் ஓதி முருகப்பெருமானை வழிபட்டு வந்தார்.

## ஏன் சூடு வந்தது?

ஒருநாள் அவர் பாடசாலை ஆசிரியர், பள்ளியில் விளையாடிக்கொண்டிருந்த பிள்ளைகள் எல்லோரையும் வளார்கொண்டு அடித்தார்; விளையாடாத கலியாணசுந்தரரையும் சேர்த்து அடித்துவிட்டார். ஒரு குற்றமும்

செய்யாத தம்மையும் சேர்த்தடித்த, "பூங்காவனக் கவி" என்னும் பெயர்பெற்ற அந்த ஆசிரியர்மீது, குற்றம் சாட்டித் தம் தந்தையாருக்கு,

"எவ்விதக் குற்றமும்யான் இன்றுசெய் யாதிருக்க
எந்தன் தொடையதனி லேன்சூடு—வந்ததெனப்
பூரணமாய்க் கல்விகற்ற பூங்கா வனக்கவியைக்
காரணநீ கேட்டிடுக கண்டு"

என்னும் வெண்பாவை ஓலையில் எழுதி அனுப்பினார். தந்தையார் அதைக் கண்டு, சினமும், துயரமும் கொண்டார்; ஆசிரியரை அணுகித் தம் புதல்வர் செய்த குற்றம் யாதென வினவினார்; மகனார் பாடிய அப்பாடலையும் அவரிடம் காட்டினார். ஆசிரியர் அதைக் கண்டு, மிகவும் மனம் வருந்தி, அவர் தந்தையாரிடம் பற்பல ஆறுதல் மொழிகள் கூறினார். ஆனால், அவர்தம் புதல்வரை மேலும் அவரிடம் ஒப்புவிக்க மனம் துணியவில்லை. தமிழும், ஆங்கிலமும் ஒருங்கு கற்பிக்கப்படும் வேறு பாடசாலைக்குத் தம் புதல்வரை அனுப்பினார். கலியாணசுந்தரர் அன்று தொட்டு ஆங்கிலமும், தமிழும் கற்பாராயினர்.

## தோட்டக்காரச் சூரன்

ஒருநாள் மாலையில் சில மாணவர்களும், கலியாணசுந்தரரும் வீட்டிற்குத் திரும்புகையில், குறுக்கு வழியாக ஒரு தோட்டத்துள் புகுந்தனர். சூரன் என்னும் தோட்டக்காரன் அங்குத் தழைத்திருந்த இளம்பயிர் அழிந்துவிடுமென எண்ணி, வெகுண்டு, மாணவர்கள் ஒவ்வொருவரையும் கோலால் அடித்தான். சுந்தரரும் மாணவர்களோடு தோட்டக்காரனிடம் கோலடி வாங்கினார். தோட்டத்தில் நுழைந்த சிறுதவறுக்காகத் தங்களை அவ்வளவு கடுமையாக அடித்த, கன்னெஞ்சத் தோட்டக்காரனைத் தண்டிக்க வேண்டுமென்று அருகிலிருந்த காளியம்மனை வேண்டி,

"தோட்டக்காரச் சூரன் தோன்றி வளாரடியைப்
போட்டான் முதுகில் பொறுக்கேனன்—தோட்டிதழ்*சேர்
தாராரும் காளியே! தாரணியி லன்னவனைப்
பாராம லேயிருக்கப் கண்"

என்ற வெண்பாவைப் பாடினார். இவ்வெண்பாவைப் பாடின அன்று இரவே அத்தோட்டக்காரன் தெய்வ கதியால் ஏற்றத்தினின்றும் விழுந்து முடம்பட்டான் என்பர். இப்புலவர் ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் இறைவன் திருவருளே காரணம் என நம்பி வந்தார். பல்வேறு தெய்வங்களாக நின்று அருள்புரியும் முழுமுதற் பெரும் பொருளாக விளங்கும் ஒரே இறைவனைக் கலியாணசுந்தரர் அக்காலத்துக்கு ஏற்ப, அந்தந்தத் தெய்வங்களாகவே பாவித்துப்பாடும் வழக்கத்தை மேற்கொண்டார்.

## இராமலிங்கத் தம்பிரானிடம் கல்வி

1869-ம் ஆண்டில், கலியாணசுந்தரர் சென்னைமா நகரம் அடைந்தார். அங்குள்ள பச்சையப்பன் பாட சாலையில் கல்வி கற்பாராயினர். அவர்க்குத் தமிழ்மொழி யில் அளவு கடந்த ஆசை உண்டு. தமிழ் அமுதையே நாடோறும் மிகுதியாகப் பருகித் தமிழ்க் கல்வியில் சிறந்து வந்தார். அவர் கண்ணும் கருத்தும் உயர்தனிச் செம் மொழியாகிய தமிழ்மொழியிலேயே சென்றன.

அக்காலத்தே சொர்க்கபுரம், இராமலிங்கத் தம்பிரான் என்பவர் சைவ சித்தாந்தத்தில் செம்புலமை பெற்று விளங்கினர். அவர் பெருமையையும், புலமையையும் கேள்வியுற்றுச் சுந்தரர் அவரிடம் ஆவலுடன் அணுகினர். கீழ்க் குறிக்கும் பாடலைப் பாடித் தமக்குத் தமிழறிவு செம்மையுற அருள் செய்யுமாறு வேண்டினர்.

* தோட்டிதழ்—அழகான மலர்பொருந்திய.

"இலக்கிய வாரிமடுத் தீர்ங்கவிப்பா வாணர்க்(கு)
இலக்கிய மாரிபொழிந் தென்றும்—இலக்கியமாய்
கண்ணும் இராமலிங்க நன்முகிலே என்மனமாம்
பண்ணையினும் மேனிரம்பப் பண்."

தம்பிரான் பாடலைக் கேட்டு வியந்து, கலியாண சுந்தரரையும் தம் மாணவர்களில் ஒருவராக ஏற்றுக்கொண்டார். அவருக்குப் பெரியபுராணம், திருச்சிற்றம்பலக் கோவையார் முதலிய நூல்களைக் கற்பித்தார். அப்போது இயல்பாகவே சைவப்பற்றுள்ள கலியாண சுந்தரருக்கு எல்லாச் சமயங்களுக்கும் தாயகமாக விளங்குவது சைவசமயந் தான் என்ற உறுதி உண்டாயிற்று. ஆதலால், சுந்தரர் பண்டைய சைவப் பெரியார்கள் போலத் தாமும் காஞ்சி மாநகரம் சென்று, சிவதீக்கை பெற்று, மகிழ்வுற்றார்.

## இராமலிங்க அடிகளைக் காணுதல்

பின்னர் அவர் சைவசித்தாந்த சாத்திரங்களையும் நன்கு பயின்றார்; அச் சாத்திரப் புலமையும் பெற்றார். எங்கெங்குச் சைவப் பெரியார்கள் திகழ்ந்தனரோ அங்கெல்லாம் சென்று, அவர்களிடம் பல அரும்பொருள்கள் பற்றி உரையாடி அளவளாவுதல் அவருடைய வழக்கம். அத்தகைய பழக்கத்தை இன்பத்தொழிலாக மேற்கொண்ட கலியாண சுந்தரர் சிதம்பரத்திற்கு அருகேயுள்ள வடலூர் சென்றார். "ஆண்டவன் அருட்சோதியாக விளங்கும் வள்ளல்" என்று கல்லும், இரும்பும் கரைய ஆயிரக்கணக்கான பாடல்களைப் பாடிச் சமரச அறிவைப் பரப்பி வந்த, இராமலிங்க அடிகளை அணுகினார். அருட்பிரகாச வள்ளல் என்னும் பேர்கொண்ட அவ்வடிகளைக் கண்டு, களிபூத்தார். வடலூரில் உள்ள பெரிய வெளியைக் கண்டு, உள்ளம் கனிந்து, ஆண்டவனைப்பாடி, அன்பு வெள்ளத்தில் தோய்ந்தார். அத்தகைய வெட்டவெளியில்

இறைவன் இன்னருளை வியந்து, இன்னிசைப் பாக்கள் பாடி, மனம் உருகி, இறைவன் அடியிலே சிந்தனை செலுத்திக்கொண்டிருந்த, அருட்பிரகாச வள்ளலாரின் அருள் நோக்கம் பெற்றுத் திரும்பினார்.

## மகாவித்துவான் மீனாட்சிசுந்தரரைக் காணுதல்

அதன் பின்னர், 1873-ம் ஆண்டில், சுந்தரர் திருமயிலையில் அதுபோது வந்திருந்த, திரிசிரபுரம் மகாவித்துவான், மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களை அடைந்து,

"சீர்பெருகுஞ் சிரபுரத்து மீனாட்சி
சுந்தரநற் செம்ம லேறே!
ஏர்பெருகு நின்வீட்டு வாயிலினில்
நிற்கின்றேன் எனைய ழைத்துப்
பேர்பெருகுங் கல்விநலம் மென்மேலும்
என்றனக்குப் பிறங்கி யோங்க
ஆர்பெருகு நின்னாசி யினைக்கூறி
அன்புடனே ஆட்கொள் வாயே"

என்ற பாடலை எழுதியனுப்பினார். மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் அப்பாடலைக் கண்டு, புன்னகைகொண்டு, சுந்தரர் தம் புலமையைப் பாராட்டித் தாமும்,

"கலியாண சுந்தரவென் கண்மணியே நின்பால்
மலிவாகக் கல்வி வளரும்—பொலிவாகப்
பொற்புவியிற் கற்றோர் புகழச் சிவஞான
விற்பனனாய் வாழ்ந் திருக்கவே"

என்ற பாடலைச் சொன்னார். இப்பாடலைப் பன்முறை ஓதி ஓதிப் பேரின்பம் எய்தினார் நம் புலவர்திலகராகிய கலியாணசுந்தரர்.

## பேறை - தசாவதானம் - ஜெகந்நாதப் பிள்ளையவர்கள்

பின்னர் 1875-ம் ஆண்டில், சுந்தரர் செங்கற்பட்டு நகருக்குச்சென்று, அங்குள்ள பாடசாலையிற் சேர்ந்து,

மேலும் கல்வி கற்பாராயினர். அங்கு அப்போது இலக்கணத்திற் பெரும் புலமைபெற்று விளங்கியவர், பேறை-நசாவதானம், ஜெகந்நாதப்பிள்ளை என்பவர். சுந்தரர், நன்னூல் விருத்தி, இலக்கண விளக்கம், இலக்கணக் கொத்து முதலிய நூல்களை அவரிடம் பாடம் கேட்டுப் பெரும் புலமைபெற்றார். அவர்களிடமே சுந்தரர் அவதானம் செய்யவும் பழகிக்கொண்டார்.

புகை வண்டி

1876-ஆம் ஆண்டில்தான், முதல் முதலாகச் சென்னையிலிருந்து செங்கற்பட்டிற்குப் புகைவண்டி விடப்பட்டது. அவ்வமயம் கலியாணசுந்தரர் செங்கற்பட்டில் ஜெகந்நாதப் பிள்ளையிடம் பாடம்கேட்டுவந்தார். ஜெகந்நாதப் பிள்ளை அதுவரையில் மக்கள் கனவிலும் நினையாத உலகில் ஒரு புதுமையைக் காட்டப் புறப்பட்ட புகை வண்டியை வியந்து,

“ பாருங்க ளோர்நொடியிற் பன்னுமிடம் போய்வரலாம்
வாருங்க ளன்னதடை மாநிலத்தீர்—

என்று இரண்டு அடிகளைப் பாடியதும், கலியாணசுந்தரர்,

—“ நீருங்கள்
காலா னடவாமல் காசுமிக நல்காமல்
மேலாக வாழ்வினி மேல்.”

எனப் பின்னிரண்டு அடிகளைத் தாமே பாடி வெண்பாவை முடித்தார்.

## உ. அட்டாவதானம் செய்தல்

பண்டைய காலத்தில் ஒரு புலவரின் பல திறப்பட்ட ஆற்றல்களை உலகுக்கு இனிது காட்ட, அவதானம் செய்கின்ற ஒரு வழக்கம் நிலவி வந்தது. அத்தகைய அவதானங்கள் செய்ய வல்லார்கள் ஏனைய புலவர்களைக் காட்டினும் சிறந்த புகழ்பெறுவார்கள். பெரும்புலமை பூண்ட புலவர் மணிகளும், அவதானம் செய்தல் மிகவும் அரிய புலமையெனக் கருதினார்கள். ஒரு பேரவையில், பல புலவர்கள் ஒரே காலத்தில் பலவகைப் பொருள்களை வைத்துப் பலவகைப் பாக்களில் அப்போதே பாடிக் காட்டுமாறு கேட்பார்கள். இன்னும், கல்வி காரணமாக எத்தகைய பொருளையும் கேட்க அப்புலவர்களுக்கு உரிமை உண்டு. இவ்வாறு அவதானம் செய்யும் ஆற்றலைக் கொண்ட தமிழ்ப் பெரும் புலவர்கள் சிற்சிலரே என்று கூறலாம்.

கலியாண சுந்தரர் 'பெரும்புலவர்' என்ற பட்டம் பெறுவதுமாத்திரம் போதாது எனக்கருதி அட்டாவதானி என்ற சீரிய புகழையும் பெறவேண்டுமென்று பெரிதும் விரும்பினார். ஆதலால், அவர் 1878-ம் ஆண்டில், செங்கற்பட்டிற்கு அருகேயுள்ள சிவநகரமாகிய திருக்கழுக்குன்றம் என்னும் நகரில், அவதானம் செய்யத் துணிந்தார். அதன் சிறப்பைத்தான் உலகம் அறியுமே. வேதகிரி என்னும் பெயரிய அங்குள்ள மலையின்கீழ் ஒரு பெரிய மண்டபம் உண்டு. அம்மண்டபத்தில்தான் அட்டாவதானம் செய்ய முன்வந்தார் சுந்தரர். அங்குப் பெருந்திரளாகப் பற்பல கல்விமான்களும், புலவர்களும், பாவலர்களும், நாவலர்களும், அறிஞர்களும் வந்து குழுமினார்கள். அவதானம் செய்யும் அப்பேரவைக்குச் சுந்தரரின் ஆசிரியர், **தசாவதானம் ஜெகன்னாதப் பிள்ளை** என்பவர் தலைமை பூண்டார்.

அவையிற் கூடிய பல அறிஞர்களில் ஒருவராகிய, செங்கற்பட்டு வழக்கறிஞர், சுந்தர முதலியார் என்பவர், சுந்தரரை அத்தத்திற்கும், புத்தகத்திற்கும் சிலேடையாக ஒரு வெண்பாவைப் பாடுமாறு கேட்டார். (அத்தம்=கை.) சுந்தரர் புன்னகையுடன் எழுந்து, கீழ்க்குறிக்கும் வெண்பாவைப் பாடினர்.

"மூடித் திறத்தலினால் மொய்ரேகை யேயுறலால்
நாடி யெவருமே நண்ணுகையால்—கோடலினால்
வித்தகர்கள் நத்துகின்ற வேதகிரி தண்பதியில்
அத்தமது புத்தகமு மாம்"!

பின்னர் சிவக்கொழுந்து பண்டாரம் என்னும் புலவர், "பால்" என்னும் சொல், பத்து இடங்களில் வருமாறு ஒரு வெண்பாவைப் பாடும்படி கேட்டார். சுந்தரர் சுருக்கென எழுந்து,

"பறறுங கொடிக்ககனும் பஙகயனுங் காணவும
பற்றே லுரித்த வண்ணப் பாலேபால்—மற்றப்பால்
மாட்டுப்பால் பூப்பால் மரப்பால் வனிதையர் பால்
ஆட்டுப்பால ப்பாலிப்பால்."

என்ற வெண்பாவைப் பாடினர்.

அதன் பின்னர், செய்யூர் பெருநிலக்கிழார், வைத்திய நாத முதலியார் என்பவர், "நாடு" என்று எடுத்து, "ஊர்" என்று முடித்து, ஒரு வெண்பாவைப் பாடும்படி கேட்டார். சுந்தரர் உடனே மலர்ந்த முகத்துடன் அவரை நோக்கி,

"நாடுசே ரன்சோழ நற்பாண்டியன் முதலோர்
தேடு பொருள் யாவுஞ் சிறக்குமால்—நீடுதொண்டை
மண்டலத்திற் கோர்திலகன் வைத்தியநா தச்சீமான்
ஒண் டிறலோ டேவாழ் செய்யூர்."

என்ற வெண்பாவைச் சொன்னர்.

பின்னர் அட்டாவதானத்திற்குரிய ஏனைய பகுதிகளையும் அவையோர் அனைவரும் வியப்புற இனிது நிறைவேற்றினர். அன்றுமுதல் நம் புலவர் பெருமானுக்கு அட்டாவதானம் கலியாணசுந்தர முதலியார் என்ற பெயர் செந்தமிழ் நாடெங்கும் வழங்கலாயிற்று.

## ரு. இல்லற வாழ்வு

திருமணம்:—1879-ம் ஆண்டில், கலியாணசுந்தரர்க்குத் திருமணம் நிகழ்ந்தது. மேடவாக்கம் என்னும் ஊர் பலவளங்கள் நிறைந்தது. அங்கு விருந்தாற்றும் பண்பிற் சிறந்து விளங்கியவர் வேங்கடாசல முதலியார். அவர் அருந்தவப் புதல்வி, பார்ப்பாத்தி என்னும் பாவை. சுந்தரர் அவ்வணங்கினைத் திருமணம் புரிந்தார். புலவர் பெருமக்களும், பண்டித சிகாமணிகளும், நாவலர், பாவலர்களும், அறிஞர்களும், அன்பர்களும், சுந்தரர் மணவிழாவின் பெரும்பொலிவைக் கண்குளிரக் கண்டு, மகிழ்ச்சி பூத்தார்கள். அத்திருமணவிழாவின் அழகை மேலும் அணியுறச் செய்தார் ஆண்டு எழுந்தருளியிருந்த, திருமழிசை, வித்துவான் சிவப்பிரகாசர் என்பவர். அவர் கலியாணசுந்தரர்க்குப் பலபொருட்சுவைகளும், அணிகளும் பொதிந்த ஒரு திருமண வாழ்த்துப் பாடி, அதற்குப் பொருளுரைத்துத் திருமணம் காண வந்த மக்கள் அனைவரையும் மகிழ்வித்தார். இப்பெரும் புலவராகிய, சிவப்பிரகாசர்தான் பின்னர்த் திருப்போரூர்த் தம்பிரான் ஆகத் திகழ்ந்தார்.

கலியாணசுந்தரர் திருமணம் புரிந்து, இல்லறத் துறையில் இனிது வாழ்கையில், இறைவன் திருவருளால், பெண் மகவு ஒன்று தோன்றியது. அம்மகவுக்குச் சிவஞானம் என்னும் பெயரைச்சூட்டி மகிழ்ச்சியுற்றார். பசுங்குழவி

யின் பால்போன்ற களங்கமில்லா முகப்பொலிவைக்கண்டு, குழலையும் வெல்லும் மழலைமொழியைக் கேட்டுச் சுந்தரர் மகிழ்ந்து, மகப்பேற்றின் அருமையை வியந்தார். அவர் இல்லம் இன்பவெள்ளம் ஓடும் இடமாக இருந்தது மன்றி, அன்பு வெள்ளம் ஓடும் அகமாகவும் பொலிந்தது. சுந்தரர் அன்பும், இன்பும் பூண்டு, இல்லறக் கடன்களைச் செவ்வனே ஆற்றி வாழ்ந்துவந்தார்.

## தந்தையார் பிரிவு

இன்பமும், துன்பமும் உலகில் மாறி மாறி வரும் இயற்கை, கலியாணசுந்தரர் இல்லற வாழ்க்கையிலும் உண்மையாயிற்று. அவர் திருமணம் நிகழ்ந்த அடுத்த ஆண்டில், அவர் தந்தையார் உலக வாழ்வை நீத்தார். அதனால் அவர் குடும்பத்தார் அனைவரும் துயர்க்கடலில் ஆழ்ந்தனர். அருமைத் தந்தையாரை இழந்த சுந்தரர் மனவுறுதி தளராமல், தாம் செய்யவேண்டிய கடமைகளைச் செம்மையாகச் செய்து முடித்தார். குடும்பத்தைக் காக்கும் பொறுப்பு வந்ததனால், அவர் அரசாங்க அலுவல் ஏதாயினும் பெற விரும்பினார்.

## பரங்கிமலையில் அரசாங்க அலுவல்

1881-ம் ஆண்டில், சுந்தரர் பரங்கிமலைக்கு அலுவல் ஏற்க வந்தார். பரங்கிமலையில் வாழ்ந்துவந்த மக்கள் அனைவரும் கலியாணசுந்தரர் பரங்கிமலைக்கு வருகின்றார் என்பதைக்கேட்டுப் பெருமகிழ்ச்சி யடைந்தார்கள். சுந்தரர் வரும்போது அவரோடு தமிழ் மணமும், சைவமணமும் உடன்வரும் என்று அம்மக்கள் முன்னமே அறிந்திருந்தனர். அவர்கள் எண்ணியவாறே, சுந்தரர் அங்கு அரசாங்க அலுவல் பார்த்து வந்தாலும், தமக்குக் கிடைத்த ஓய்வுநேரங்களிலெல்லாம் கேட்போர் செவி இனிக்க, உள்ளங்கனிந்துருக விரிவுரைகள் செய்தார். அங்கு

வாழ்ந்த மக்களை அன்புக்கடலில் திளைக்கச்செய்தார். கலியாணசுந்தரருக்கு இயற்கையிலேயே அமைந்திருந்த சிவபத்திக்கு எல்லையில்லை. அவர் எப்போதும் சிவபெருமான் திருவருளைத் தமது உள்ளத்தில் நினைந்தவண்ணமே காலம்கழித்து வந்தார். இருக்கும்போதும், நிற்கும் போதும், இரவு கண் துயிலும்போதும், சிவபெருமான் திருவருளை நினைந்து நினைந்து, அன்பு வெள்ளத்தில் திளைத்தார். நம் புலவர் பெருந்தகைக்கு மேலும் மேலும் இறையன்பு பெருகியது. எனவே, அலுவல் துறையில் சுந்தரர் உவகை கொள்ளவில்லை என்பது வெளிப்படை.

## ௪. சென்னையில் மாணவர் சூழாம்

1882-ம் ஆண்டில், சென்னை மக்கள் செய்த தவப்பயனாய்ச் சுந்தரர் சென்னைமா நகரம் வந்து சேர்ந்தார். சென்னையில் அவர் மைத்துனர் வாணிகம் செய்துவந்தார். சுந்தரர் அவ்வாணிகச் சாலையில் ஓர் அலுவலை ஏற்றுக் கொண்டு, தாம் முன்னர் ஏற்றிருந்த அரசாங்க அலுவலைக் கைவிட்டார். உண்மையில், சுந்தரர்க்கு எந்த அலுவலிலும் விருப்பமில்லை. தமக்குரிய உண்மைப்பணி, தமிழ் நூல்களைப் படிப்பதும், சொற்பொழிவுகள் புரிவதும், மாணவர்களுக்குத் தமிழ் கற்பிப்பதுமே என்று எண்ணினார். இல்லறத்திற்குச் செல்வப்பொருள் இன்றியமையாததாக இருத்தலின், மனக்கசப்புடனேயே அவர் சிறிது காலம் மேற்கூறிய வாணிகச்சாலையில் அலுவல் புரிந்து வருவாராயினர்.

### மாணவர் பெருக்கம்

கலியாணசுந்தரர் புலமையொளி, மாணவர் கூட்டத்தை எளிதில் ஈர்த்தது. "தாம்பெற்ற இன்பம் பெறுக

இவ்வையகம்" என்பது பெரியோர் பொன்மொழி. சுந்தரர் விழுத்தகு கல்வியும், மேதகு மெய்யன்பும் பெற்று இல்லறத்தில் சிறந்து வாழ்ந்தார். சைவ விரிவுரைகளும் பற்பல நிகழ்த்தினார். மாணவர்களுக்கும் மாண்புறு கல்வி வழங்கும் கல்வி வள்ளலுமானார்; குலவேற்றுமை, உயர்ந்தோர், தாழ்ந்தோர் வேற்றுமை முதலிய எத்தகைய வேற்றுமையையும் அவர் காட்டியதில்லை. தம்மை அணுகினவர்கள் அனைவர்க்கும் தமிழறிவைச் செவ்விதின் வழங்கினார்.

சுந்தரர் மனையகம், மாணவர் தம் மாண்புள்ள நல்லகமாயிற்று. மாணவர்களுக்குத் திருவிளையாடற் புராணமும், செந்தமிழ் இலக்கணமும், இலக்கியங்களும், சைவ சித்தாந்த நூல்களும் பாடம் கூறத் துவங்கினார். அவரிடம் பாடங்கேட்டுப் பல மாணவர்கள் புலமைபெற்றனர். சில ஆண்டுகளுக்குள், எண்ணிறந்த மாணவர் தோன்றிவிட்டனர். அவர் இல்லத்தில் மாணவர்குழாம் பொலிந்திருந்த காட்சியை, அவர் மாணவர்களில் ஒருவராகிய, மணி. திருநாவுக்கரசு முதலியார், தாம் இயற்றிய பாவலர் ஆற்றுப் படையில்,

"பதிபசு பாசப் பழம்பொருள் கேட்குநர்,
விதியுளி தத்துவ வியநூல் படிக்குநர்,
அன்பென் குழவி அழகுற வளர்க்குநூஉஞ்
சின்மய புராணஞ் செவியிற் பருகுவோர்,
பருகு வன்னத் திரியா நோக்குடன்
ஓவியம் ஏய்ப்ப ஆவலிற் கேட்போர்,
அளவை நூலின் அளவினை அறிவோர்,
மறைப்பொருள் முழுவதூஉ மறையிற் கேட்குநர்,
இலக்கணம் படிப்போர், இலக்கியங் கற்போர்,
அலக்கண் தடிக்க ஐயந் தெளிவோர்,
அத்து விதப்பொருள் அளப்பில் உண்மைத்

தத்துவந் தேர்வோர், கலைநிலை யுணர்வோர்,
சித்தர் நூலின் சித்தந் தெளியுநர்,
'இன்னோர் பலரும் ஈண்டிய குழுவின்"

எனக் கூறியதினின்று செவ்வையாக அறியலாம். சில பெண்மணிகளும் சுந்தரரிடம் பாடம் கேட்டார்கள். அவர் களுக்கும் நல்ல தமிழ் அறிவு ஊட்டினர். ஒரு மாணவ ரிடமும் எக்காலத்திலும் எக்காரணத்தைக்கொண்டும், அவர் கடுமையான மொழி வழங்கியதே இல்லை. எவரிடத் திலும், எப்போதும் அன்புடனே உரையாடும் அருங் குணம் வாய்ந்தவர். பொருளையும் எதிர்பாரார்; நன்றி யையும் எதிர்பாரார். எல்லா மாணவர்களையும் "அம்மா" என்று அழைக்கும் அரிய பழக்கத்தைத்தான் கைக் கொண்டிருந்தார். அவர் மனையற வாழ்க்கை, மாண்புள்ள மாணவர்கள் மிளிரும் நல்லற வாழ்க்கையாயிற்று.

சுந்தரரின் தலைசிறந்த இன்பம், மாணவர்களுக்குப் பாடம் சொல்லுவதே. எனவே அவர் திருமனையில் எஞ்ஞான்றும் பற்பலமாணவர்கள் பாடங்கேட்டபடியே இருப்பார்கள். சுந்தரர் பாடம் சொல்லச் சலிக்கவே மாட்டார். தமிழ்ப் புலவர்களில் சுந்தரரைப்போல் மாண வர்களுக்குப் பாடம் கற்பிக்கும் தன்மை ஒருவருக்கும் இல்லை என்றே சொல்லலாம். இவரை அணுகிய மாண வர்கள் மிக விரைவில் கவிகள் இயற்றும் தன்மையை எளிதில் பெற்று விடுவார்கள். முற்காலத்தில், சில தமிழ்ப் புலவர்கள் மாணவர்களுக்குப் பாக்கள் பாட எளிதில் கற்றுக்கொடுப்பதில்லை. யாப்பிலக்கணத்தைப் பெரும்புதையலாகப் புலவர்கள் நெடுங்காலம் மறைத்து வைப்பது உண்டு. மாணவர்களிடத்தில் நல்ல நம்பிக்கை வருகின்றவரையில் பல புலவர்கள் யாப்பிலக்கணத்தை அவர்களுக்குக் கற்றுக்கொடுக்கமாட்டார்கள். ஆனால்,

சுந்தரர் மாணவர்களிடத்தில் எதையும் பொருட்படுத்தாமல், யாப்பிலக்கணத்தை விரைவில், எளிதில் கற்றுக் கொடுத்துவிடுவார். அவர்களைப் பல பாடல்கள் பாடும் படியும் ஊக்கமளிப்பார். மேலும், அத்தகைய பாடல்களை மிகவும் பாராட்டி, மாணவர்கள் மனதை மகிழச் செய்வார். சென்னை, பெத்துநாய்க்கன்பேட்டையிலுள்ள, திருப்பள்ளி வீதியில்தான் சுந்தரர் முதலில் மாணவர்களுக்குத் தமிழ்மழை பொழிந்தார். வயது முதிர்ந்த பெரியோர்களும் அவரிடத்தில் பாடங் கேட்டுப் பண்டிதரானார்கள். பெத்துநாய்க்கன் பேட்டை முழுவதும் சுந்தரரின் மாணவர் கூட்டங்கள் திகழ்ந்தன. அவர் மாணவர்களில் சிறந்து விளங்கியவர்கள் பலர் உண்டு. அவர்களில் வல்லை - சண்முகசுந்தர முதலியார், புழலை - திருநாவுக்கரசு முதலியார், மணி - திருநாவுக்கரசு முதலியார், மோசூர் - கந்தசாமி முதலியார் ஆகியவர்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள்.

## ரு. ஆசிரியரிடம் அன்பு

கலியாணசுந்தரர்க்குத் தம் ஆசிரியர்பால் அளவிலா அன்புண்டு. அவர் தம் ஆசிரியரைக் கண்கண்ட தெய்வமாகக் கருதினர். ஆசிரியர் நலமே தம் நலம் என்றும் எண்ணினர். திருக்கழுக்குன்றத்தில் அட்டாவதானம் செய்து முடித்தபோது, அவர் புலமையை வியந்து, செய்யூர் பெருநிலக்கிழார் (ஜமீன்தார்) அவருக்குப் பரிசளிக்க விரும்பினர். அப்போது சுந்தரர் தமக்கு ஒரு பரிசும் வேண்டாமென்றும், அப்பரிசுக்குப் பதிலாகத் தம் ஆசிரியர் ஜெகன்னாத பிள்ளையவர்கட்கு வீடு கட்ட வேண்டிய வசதிகள் செய்து கொடுக்கவேண்டுமென்றும் அவரிடம்,

" காசுதனில் எற்குக் கவலையில்லை பொற்சரிகைத்
தூசதனில் ஏதுந் துயரில்லை—வீசுபுகழ்
ஈடுகட்டும் வள்ளால் இயற்றுகவென் ஆசிரியர்
வீடுகட்டி வாழ்ந்திடுகவே."

என்று கேட்டுக்கொண்டார்.

பெருநிலக்கிழார், அதற்கு ஒருப்பட்டு, அவர் ஆசிரியருக்கு வீடு கட்டவேண்டிய பொருள்களை விருப்புடன் அனுப்பிவைத்தார். பின்னர் அவர் சுந்தரரைத் "திருக்கழுக்குன்றம் திரிபுரசுந்தரிமாலை" பாடும்படி வேண்டிக்கொண்டார். நம்புலவர் மணி அவ்வாறே பாடித் தந்தார். பின்னர் சின்னாட் சென்றதும், பெருநிலக்கிழார் சுந்தரரைத் தம் இல்லிற்கு அழைத்து விருந்தாற்றி, தக்க பரிசளித்து அனுப்பவேண்டுமென்று பேரவாக் கொண்டார். சுந்தரரைத் தம் மனைக்குப் பரிசளிக்க அழைத்த பெருநிலக்கிழாருக்கு, ஒரு சீட்டுக்கவி எழுதியனுப்பினர். அக்கவியில் தமக்குப் பொருள் ஒன்றும் வேண்டியதில்லை என்றும், தமக்கு வேண்டியது அவர் நட்பே என்றும், அந்நட்பு வளர்பிறைபோல் வளரவேண்டும் என்றும், சுந்தரர் குறிப்பிட்டிருந்தார். அச்சீட்டுக்கவி கீழ்வருமாறு :—

" கண்டனைய செந்தமிழி லாயிரமா யிரமாகக் கவிகள் செய்வோன்
கவிவாணர் புவிவாணர் வியந்துபாராட்டுநற் கலைகள் வல்லோன்
எண்டிசையுஞ் சிவமணமே நனிவீசப் பிரசங்க மியற்று தீரன்
எவரேனும் பொற்குவியல் பரிசாக வீந்திடினு மேற்றிடாதோன்
தொண்டை மண்டலம் பூவைக் கலியாண சுந்தரனேர் தூய்விற்பன்ன
துலக்கமுட னனுப்புமொரு கடிதமதைச் சூழ்ந்திங் கோர்க ன்
கொண்டனிகர் சேயூர் வைத்தியச் சீமானே நினது குணத்திற்கே
ற்பக்
குலவியமித் திரமொன்றே வளர்பிறைபோ லென்பாலிற் குறித்
திடாயால்."

சீட்டுக்கவியைக் கண்டதும், பெருநிலக்கிழார் மனமகிழ்ந்தார். சுந்தரர் அதைக் கேள்வியுற்று, அவர் இல்லத்

திற்குச் சென்று, அங்கு ஒரு கிழமை தங்கினார். அவர் பெருநிலக்கிழாரோடு அளவளாவி அன்புடன் நட்புரிமையை நாகரும்நால், செங்கற்பட்டிலிருந்து, தம் ஆசிரியரையும் அங்கு வரவழைத்தார். பெருநிலக்கிழார் தமக்காக வைத்திருந்த பரிசுகள் அனைத்தையும் வாங்கித் தம் ஆசிரியரிடமே கொடுத்துவிட்டார். இவ்வாறு சுந்தரர் இருவர்க்கும் மகிழ்ச்சி அளித்தார். இவர் தம் ஆசிரியர் பால் வைத்திருந்த அன்பை என்னென்பது? மேலும், சுந்தரர் தம் ஆசிரியருக்குப் புரிந்த உதவிகள் பற்பலவுள; அவருக்கு ஆற்றிய அன்பான பணிகளும் எண்ணிறந்தன. சுருக்கிச் சொல்லுமிடத்து, சுந்தரர் தம் ஆசிரியரைத் தம் தந்தையினும், தாயினும் சிறந்தவராகவும், கண்கண்ட தெய்வமாகவும் கருதினார் எனலாம்.

## ௩. சொற்பொழிவுகள்

கலியாணசுந்தரர் மாண்புள்ள தோற்றமும், சைவப் பொலிவுடைய தெய்வத் தனியழகும்பெற்று, இனிய காட்சி அளிப்பார். அவரைக் கண்ட மக்கள் அனைவரும் அவர் திருவுருவத்தின் காட்சியில் மனம் உருகிவிடுவர். அவர் விரிவுரைப்பேச்சு, யாழிசைபோன்ற சுவைபயக்கும்; எல்லோர் உள்ளத்தையும் ஈர்க்கும் இன்பப்பேச்சு; கள்ளமில்லா உண்மை நிறைந்த கனிந்பேச்சு. தூய சைவக் கோலமும், மெய்யெலாம் மிளிரும் வெண்ணீறும், தாழ் வடமும், விரிவுரை மேடையில், தெய்வமணம் கமழும் இன்பக்காட்சியை அளிக்கும். சென்னையின்கண், நடராச சபை என்று ஓர் சங்கம் நிறுவிப் பல்லாண்டுகள் திருத்தொண்டர் புராணம், திருவிளையாடற் புராணம், திருவாத வூரர் புராணம், சிவரகசியம், உபதேசகாண்டம், தாயுமானார் பாடல் முதலிய வைதீக சைவ சொற்பொழிவுக

ளாற்றிப் பெரும்புகழ் பெற்றார். பொதுமக்களும், பல புராணிகர்களும் அவர் சொற்பொழிவுகளைக்கேட்டு, மிக இன்பம் அடைந்தார்கள்.

அவர் சொற்பொழிவின் தனிச்சிறப்பு என்ன வென்றால், அவர் எப்பொருளையும் மிகவும் தெளிவுடக் கேட்போர் உள்ளத்தில் பதியும்படி, எளிய இனிய நடையில், நகைச்சுவை ததும்பச் சொற்பொழிவு செய்வதே யாகும். மிகவும் கடினமான பொருள்கள் என்று சொல்லப்படுகின்ற, சைவசித்தாந்த நுண்பொருள்களையும் யாவரும் அறியும்படி, மிகவும் தெளிவாக எடுத்துரைப்பார். பொருத்தமான மேற்கோள்களைக் காட்டிக், கேட்போர் உள்ளங்களைக் கவர்ந்துவிடுவார். பதி, பசு, பாச இலக்கணங்களையும் பளிங்குபோல் இனிது காட்டுவார். "உலகப் பற்றைச் சிறிது சிறிதாக நீக்கவேண்டும். இறைவன் மக்கள் உள்ளத்திலேயே உறைகின்றான்; பாவத்தை நீக்கி, அறத்தையே அணிகலனாக அணியவேண்டும்; கூற்றுவன் நம் உயிரைக்கவரக் கள்ளன்போலவும், நம் நிழல்போலவும், நம்மை எப்போதும் தொடர்ந்து நிற்கின்றான்; இறைவன் திருவருளில் முழுநம்பிக்கை இருத்தல்வேண்டும்" என்றும், இன்னும் இப்பெற்றித்தாய நுண்பொருள்களையும், அவர் மக்களுக்குத் தெளிவாக எடுத்துரைத்தது போல், எவரும் எடுத்துரைத்ததில்லை என்றே கூறலாம்.

அவர் சென்னையிலும், வெளியூர்களிலும், தென்னாட்டிலுள்ள பல பதிகளிலும், பற்பல சைவசமயச் சொற்பொழிவுகள் செய்து, ஒப்பிலாப் புகழ்பெற்றார். அவர் பற்பல அவைகளிலும், பற்பல சொற்பொழிவுகள் ஆற்றினார்; பற்பல சமயங்களில் தலைமையும் ஏற்றார். எனவே, செந்தமிழ் நாட்டில், அருந்தமிழ்ப் புலவரோடு, அட்டாவதானம் - கலியாணசுந்தர முதலியார் என்னும் பேரும்,

சொற்பொழிவு செய்வதில் "சித்தாந்த சரபம்" என்னும் பேரும் வழங்கலாயின.

1916-ஆம் ஆண்டில், தூத்துக்குடி சைவ சித்தாந்த சபையாரால் 33-ஆம் ஆண்டு நினைவுவிழா நடைபெற்றது. அப்போது நம் புலவர் அச்சபைக்குத் தலைமையேற்று, மூவாயிரத்திற்கு மேற்பட்ட பெருந்திரளான பேரவையில், தம் தவக்கோலப் பொலிவோடு, சைவசித்தாந்த நூண்பொருள்களை அழகாகவும், தெளிவாகவும் எடுத்து விளக்கினார். 1917-ம் ஆண்டு, திருவண்ணாமலை சத்திவிலாச சன்மார்க்க சபையார் வேண்டுகோளுக்கு இணங்கி, அச்சபையின் இரண்டாம் ஆண்டு விழாவிற்குத் தலைமை பூண்டார். கண்டார் கண்ணும் மனமும் களிக்கத் துறவுத் திருக்கோலம் பூண்டு, சுந்தரர் மெய்ப்பொருளின் நூணுக்கங்களை நன்கு விளக்கினார். அவர் தெளிவான விரிவுரையை அருங்கலைப் புலவர்கள் பலரும் பெரிதும் பாராட்டிப் பேசினார்கள். அதே ஆண்டில் தென்னாட்டுச் சைவசித்தாந்த மகாசமாசத்தார் விழைந்தவண்ணம், பிரம்பைச் செம்பிய நகர்க்கண் நடைபெற்ற, 12-ஆம் ஆண்டு விழாவிற்குத் தலைமை பூண்டார். புலவர்கள் நிறைந்திருந்த அவ்விழாவில் சைவசித்தாந்தத்தின் நூணுக்கங்கள் பலவற்றைக் கேட்டோர் உள்ளத்தில் களிததும்ப, விண்மாரி எனச் சொன்மாரி பொழிந்தார்.

சுந்தரர் பூவாளூர் சைவ சித்தாந்த சங்கம், திருநெல்வேலிப் பேட்டை சைவசித்தாந்த சபை, ஜலகண்டபுரம் ஸ்ரீ சன்மார்க்க சபை, மணிமங்கலம் - திருநாவுக்கரசு சுவாமிகள் சபை, ஐயங்கார் குளம் சைவசித்தாந்த சபை, வாலாஜாபாத் மாணிக்கவாசகசுவாமிகள் சபை, காவித்தண்டலம் சைவசித்தாந்த சபை முதலிய பல சபைகளில் தலைமைபூண்டு சைவசமயத்தின் அருமையையும், பெருமை

யையும், சைவ சித்தாந்தத்தின் நுட்ப திட்பங்களையும் பலரும் எளிதில் அறியுமாறு அருமையான சொற்பொழிவுகள் செய்து, தென்னாட்டில் தமிழ் மணத்தையும், சித்தாந்த மணத்தையும் கமழச்செய்தார்.

1917-ஆம் ஆண்டில், சேக்கிழார் பெருமான் திரு நட்சத்திரத்தன்று, தாம் திருப்பணி நடத்திய சென்னை அருணாசலீச்சுரர் கோவிலில் "சேக்கிழார் வைபவம்" என்று ஓர் சிறந்த விரிவுரை புரிந்தார். பின்னர் அச் சேக்கிழார் பெருமானைக் கோவிலில் எழுந்தருளச் செய் தார். பின்னர் அப்பெருமானுக்குத் திருவீதி விழாவும் நடத்திவந்தார்.

பத்திராசிரியரும் நூலாசிரியரும்

1918-ஆம் ஆண்டில், சைவசித்தாந்த சாத்திரத்தின் அருங்கருத்துக்களைத் தமிழ் மக்கள் உணர்ந்து உய்யுமாறு, சைவசித்தாந்த சமாசத்தார், "சித்தாந்தம்" என்னும் திங்கள் இதழினை வெளியிட்டனர். சைவ ஒழுக்கமும், ஆங்கிலப் புலமையும், பேரறிவும்பெற்ற திரு. ஜே. எம். நல்லசாமிப் பிள்ளை அவர்கள் பி. ஏ. பி. எல். (ஜில்லா முன்சிப்) விரும்பியபடி, சுந்தரரே அதற்கு ஆசிரியராக அமர்த்தப்பட்டார். அவ்விதழில் சித்தாந்த சாத்திரக் கருத்துக்கள் பலவற்றை வெகு திறம்பட, எளிய இனிய நடையில் எழுதித், தமிழ் உலகுக்கு உதவிபுரிந்தார். அதன் சிறப்பு தென்னாடு முழுவதும் பரவலாயிற்று. வட நூல் உபநிடதங்களில் கூறப்பட்ட பல சிறந்த பொருள் களையும் அவர் வெளியிட்டு வந்தனர். அவ்விதழின் தலைப் பில் தாயுமானச்செல்வர் பாடியருளிய, கீழ்க் குறிக்கும் திருவாக்கு மிளிர்ந்தது.

"முத்தாந்த வீதி முளரிதொழு மன்பருக்கே
சித்தாந்த வீதிவருந் தேவே பராபரமே."

## ௮. ஆக்கிய பல்வகை நூல்கள்

சுந்தரர் பற்பல நூல்களை இயற்றியுள்ளார். அவை களில் மிகவும் சிறந்ததென்று கருதப்படுவது திருவான்மி யூர்ப்புராணம்.

பல்வகை நயங்களும் நிரம்பிச் சொற்சுவை பொருட் சுவை நிறைந்ததாக அப்புராணப் பாடல்கள் விளங்கு கின்றன. சுந்தரரின் பெரும்புலமையும், அவரது அழுந்திய தமிழ்ப் பற்றும், சைவப் பற்றும் ஒவ்வொரு பாடலிலும் மிளிர்வதைக் காணலாம்.

வருணனைகள், உவமைகள், பழக்க வழக்கங்கள், முன்னோரைப் போற்றுதல் முதலிய நயங்களெல்லாம் அவர் பாடல்களில் ததும்பிப் படிப்போர்க்குப் பேரின்பம் நல்கும்.

மேலும், நம் கலியாணசுந்தரர் நூற்றுக்கணக்கான சிறு சிறு நூல்கள் இயற்றித் தமிழ் உலகுக்குத் தொண் டாற்றியுள்ளார். அவைகளில் சிலவாவன :—

திருப்பாசூர் புராண வசனம், திருவலிதாய புராண வசனம், திருவேற்காட்டுப் புராண வசனம், சேக்கிழார் சுவாமிகள் சரித்திரம், திருவொற்றியூர்ப் புராண வசனம், காளத்திப் புராண வசனம், செங்கல்பட்டு சுந்தரவிநாயகர் பதிகம், ஏகாம்பரேசர்பதிகம், காமாட்சி அம்மன் பதிகம், சென்னைத் தொண்டைமண்டலம் பாடசாலைக்கு எதிரி லுள்ள கற்பகவிநாயகர் பதிகம், திருமுல்லைவாயில் மாசிலா மணி ஈசர் பதிகம், சித்தாந்த சாத்திரத்தை ஒட்டிய சித் தாந்த சாதனக் கட்டளை, சித்தாந்த தசகாரியக் கட்டளை, 'இலௌகிக போஜனவிதி' என்பவை குறிப்பிடத்தக்கவை.

## அ. பொதுநலத் தொண்டு

### நூல் நிலையம்

பின்னர், சென்னையில் சுவாமி வேதாசலம் என்ற மறைமலை அடிகளோடு கலந்து "மெய்கண்ட சந்தான சபை" என்னும் பேருடன் ஓர் அவையை நிறுவினார். அதில் பெரு நூற்கள் பல நிரம்பிய ஒரு நூல் நிலையமும் இணைக்கப்பட்டது. அந்நூல் நிலையத்திற்கு ஆசிரியர் சிவஞான யோகிகளின் அரும்பெயரே வழங்கலாயிற்று. பலருக்கும் அந்நூல் நிலையம் பெரும்பயன் தந்தது.

### தலயாத்திரைச் சங்கம்

கலியாணசுந்தரர்க்குக் கோவில் திருத்தொண்டில் விருப்பம் அதிகம். முற்றத்துறந்த ஞானிகளுக்கு மாத்திரம் அகவழிபாடு போதுமென்றும், மற்ற மக்களுக்குக் கோவில் வழிபாடே முதன்மையானது என்றும் அவர் உறுதியாக எண்ணினார். கோவில்களில் தத்துவத்தின் கருத்துக்கள் பலவாக விளக்கப்பட்டுள்ளனவென்றும், அங்கு அமைந்துள்ள திருவுருவங்கள் இறைவன் திரு வருளைக் காட்டவந்த பல வடிவங்களே என்றும், சில மக்கள் கோவில் வழிபாடு முதன்மையில்லை என்று கூறுதல் பொருந்தாது என்றும், திடமாக எண்ணியவர் நம் புலவர் பெருமான். ஆதலால், அவர் இறைவழிபாட்டைப் பற்பல தலங்களுக்குஞ் சென்று, அன்புடன் ஆற்றுதல் வேண்டு மென்று விரும்பினார். அக்கருத்துக்கு ஏற்ப, இரண்டு சங்கங்கள் சென்னையில் தோன்றின. அவை, சென்னைச் சிவ னடியார் திருக்கூட்டமும், சென்னைச் சிவனடியார் தல யாத்திரைச்சங்கமும் ஆகும். அவை இரண்டுக்கும் சுந்தரரே தலைவராக விளங்கினார். அவ்வப்போது அச்சங்கத்தார்கள் தமிழ் நாட்டிலுள்ள பற்பல தலங்களுக்கும் சென்று

பொழுது, நம் புலவர் மணியும் அவர்களோடு போய், ஆங்காங்குச் சைவசமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தி வருவார். சுந்தரர்க்கு அடியார்களைக் காண்பதிலும், சைவப் பொலிவிலும், அடியார் பணிவிடையிலும் தனிப்பற்று உண்டு. திருநாவுக்கரசு சுவாமிகள் கோயிற்பணி செய்வதில் பெருவிருப்பு உடையவர். அவருக்கு, "உழவாரப் படையாளி" என்றும் பெயருண்டு. அப்பெருந்தகையாரின் மணிவாக்காகிய, "என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்னும் திருவாக்கை நம் சுந்தரர் மறந்ததேயில்லை. தானென்ற செருக்கில்லாமல் அனைவரிடமும் அன்பு பாராட்டும் பெருங்குணத்தைப் பெற்று, இறைவனிடத்தும் பேரன்பு செலுத்தி வாழ்ந்துவந்தார் நம் புலவர்.

## ௮. வியப்பான சில நிகழ்ச்சிகள்

### திருநீற்றுச் சம்புடம்

கலியாணசுந்தரர் என்றும் இறைவன் திருவருளை நினைந்து வியக்கும் தன்மையை இயற்கையிலேயே பெற்றிருந்தார். அத்துடன் ஆண்டவன் ஒவ்வொரு ஆன்மாவின் நலத்தையும், எப்போதும் கவனித்த வண்ணமே இருக்கின்றான் என்ற எண்ணமும் அவருக்கு உண்டு. அவர் கொள்கைக்கு ஏற்ப, அவர் தம் வாழ்க்கையில் பற்பல வியப்புறு நிகழ்ச்சிகள் நிகழக் கண்டார்.

சுந்தரர் ஒருநாள் சென்னையிலுள்ள கந்தகோட்டத்தில் எழுந்தருளியுள்ள, கந்தவேளை வணங்கச் சென்றார். அப்போது அவருடைய திருநீற்றுச் சம்புடத்தை இழந்துவிட்டார். வேறு பொருள் போயிருந்தாலும், அவருக்கு அவ்வளவு மனவருத்தம் வராது. தாம் உயிரெனக்

கருதும் திருநீற்றுச் சம்புடம் தொலைந்துவிட்டதே என மனம் நைந்தார். அவர் முருகப்பெருமானை நோக்கி,

"பூதியினுக் காலயமாம் பொற்சம்பு டந்தவறி
வீதியினி லெங்கேயோ வீழ்ந்ததுநற்—சோதிமிகும்
கந்தகோட் டத்தமரும் காங்கேயா ! அக்கவலை
சிந்தையினில் வாராமற் செய்"

என்ற வெண்பாவைப்பாடித் துதித்தார். பின்னர்த் தம் இல்லம் சென்றார். இரண்டு நாட்கள் கழிந்ததும், அவர் மீண்டும் கந்தசுவாமி ஆலயம் சென்றார். அன்று கார்த்திகைத் திருநாள். அப்போது ஆலயத்தின் அருகே அவர் இழந்துவிட்ட திருநீற்றுச் சம்புடத்தை ஒருவன் தன் கையில் வைத்து விலை கூறிக்கொண்டிருந்தான். சுந்தரர் வியப்புற்று, அவனிடம் உண்மையைக்கூறி, அவனுக்குச் சிறிது பொருளும் கொடுத்து, அதனை மீண்டும் பெற்றுப் பெருமகிழ்ச்சி பூத்தார். முருகப்பெருமான் திருவருட் செயலை எண்ணி எண்ணி அப்பெருமானை மனத்தே வழுத்தி இன்புற்றார்.

2. கைத்தடி

மற்றொரு சமயம் சுந்தரர் திருவிற்கோலம் என்னும் பதிக்குச் சென்றிருந்தார். இறைவனை இறைஞ்சி, இன்புற்றுச் சென்னைக்குத் திரும்பிவிட்டார். ஆனால், கோவிலில் ஒருபுறம் தமது வெள்ளிப்பூண் பிடித்த கைக்கோலை வைத்துவிட்டதை எடுக்க மறந்துவிட்டார். அதுவும் வேறு யாராலோ எடுக்கப்பட்டுக் காணவியலாது போயிற்று. அது காரணமாக அவர் மனம் கவன்று, இறைவனை நோக்கி

"சுந்தரர்க்குக் கோல்கொடுத்த சோதியே ! கல்யாண
சுந்தரன்கோல் கொண்டதென்ன சூழ்ச்சியோ?—விந்தைமிகும்
விற்கோல மேவுந்து வீறுகழ லைப்பணிந்த
நற்கோ பதில்செய்தாய் சாற்று"

என்று பாடி வருந்தினர். சென்னைக்குத் திரும்பினர். வழியில் ஒரு கூட்டம் வந்துகொண்டிருந்தது. கூட்டத்தி லிருந்த ஒருவன், அக்கோலை வைத்திருந்தான். சுந்தரர் அவனைக் கேட்டவுடனே அவன் ஒன்றுஞ் சொல்லாமல், கோலை அவரிடம் அளித்துச் சென்றுவிட்டான். அப் போது நம் புலவர்மணி,

"கோலையங் கேனெடுத்தாய் கொண்டுவந்திங் கேன்கொடுத்தாய்
வேலையிது நாளே விளம்பிடுக—பாலைவிகர்
சொல்லார்தே விப்புகழுந் தொல்திரிபு ராந்தகனே
யெல்லாநின் றன்விளையாட் டே."

என்று இறைவனின் திருவிளையாட்டின் திறத்தை எண்ணி இன்புற்றார்.

3. மூக்குக் கண்ணாடி

பின்னர் ஒருபோது ஆண்டார்குப்பம் ஆற்றில் அவர் மூக்குக் கண்ணாடி தவறி விழுந்துவிட்டது. பன்முறை தேடியும் அகப்படவில்லை. மனம் வருந்திய சுந்தரர்,

"வாக்குக்கு வல்லசெந் தமிழ்வாணர் நாளுமகிழ வன்றோர்
நோக்குக்கு முன்றோன்றி நற்கருணை பாரிக்கு நதிவேற் சேயே
பாக்குக்கென் றுயர்சோலை யடர்பால நதியின்று பறித்த வென்றன்
மூக்குக்கண்ணாடியை யெங்ஙனம் பெறுவேனொரு சூழ்ச்சி மொன்னு"

என்று இறைவனை வேண்டினர்.

பின்னொருகால் சென்னைக்கு வந்த அக் கோவிற் குருக்களிடம் சுந்தரர் தம் கண்ணாடி தொலைந்ததைச் சொல்லி வருந்தினர். அவர் ஊர் சென்றதும் சுந்தரர் குறித்த இடத்திற் சென்று பார்க்கலானார். பலநாட்களாகியும் சிறிதுங் கெடாது கிடந்த அக்கண்ணாடி அவர் காலில் தட்டியது. மகிழ்வோடு அதனைச் சுந்தரருக்கு அனுப்பினர். சுந்தரரும் கண்ணாடி பெற்று இழந்த கண் மீண்டும் பெற்று மகிழ்வடைந்தார்.

4. 'திருமுருகாற்றுப்படையைச் சொல்'

1879-ஆம் ஆண்டில் சுந்தரர் செங்கற்பட்டிலிருந்து திருப்போரூருக்குச் செல்லுங்கால், வழியில் ஒரு காட்டில் ஒரு பாம்பு அவர் வலக்கால் சிறுவிரலில் தீண்டிப் படம் எடுத்து ஆடிற்று. நம் புலவர் நாயகம் பெரிதும் அஞ்சித் தம் வாழ்க்கை முடிந்துவிட்டது என்று எண்ணி, ஒன்றும் செய்யத் தோன்றப்பெறாமல், இருவிழிகளையும் மூடிக் கொண்டு முருகனை நினைந்து, திருமுருகாற்றுப்படையை ஓதுவாராயினர். அந்நிலையில் ஒரு தொட்டியன் அங்கு வந்தான். அவன் பாம்பை விலக்கிப் பச்சிலை ஒன்றை உண்ணக் கொடுத்தான். சுந்தரர் பச்சிலை உண்டதும், தொட்டியன் அவரை நோக்கி, "திருமுருகாற்றுப்படையைச் சொல்லிக்கொண்டு போ" என்று கூறினன். அவர் தொட்டியனுக்கு எவ்வாறு திருமுருகாற்றுப்படையைப் பற்றித் தெரியும் என்று வியப்புற்று, முருகப்பெருமானின் திருவருளின் மாட்சியை வியந்து, பெரிதும் பாராட்டினர். உள்ளம் உருகிப் பத்தி வெள்ளத்தில் திளைத்தார்.

"வேட்டவரம் பெற்று விளங்கும் உனதடியர்
கூட்டமுறும் போரூர் குருமணியே!—பாட்டிறுக்கும்
பைத்தியங் கொண்டமூப் பாவலனென் றெண்ணாமலெனை
வைத்தியமு மேற்கொண்டாய் வந்து"

"கந்தா! கடம்பா! கருணை வடிவாளா!
எந்தாய்! நற்போரூ ரிறைவனே—விந்தையுற
இப்போதிங் காட்கொண்ட தெப்படியோ அப்படியே
எப்போதும் ஆட்கொ ளினிது"

என்று பாடிப் பாடிக் கருணைவெள்ளத்தை நினைந்து இன்புற்றார்.

சுந்தரர் திருப்போரூர் சென்றதும், அங்கிருந்த தம்பிரான் சுவாமிகளிடம் நடந்ததைக் கூறினார். எல்லோரும் முருகவேளைத் துதித்து அவனருளைப் போற்றினார்கள்.

## 5. வழிப்பறி

மற்றொரு சமயம் சுந்தரர் சென்னையினின்றும் புகை வண்டியேறி, மயிலம் என்னும் பதியில் இறங்கி, ஒரு சாலை வழியிற் போய்க்கொண்டிருந்தார். அவர் தனிமையாகச் செல்லுகையிற் கருநிற மேனியும், சீற்றமுறு தோற்றமும் உடைய ஒரு கள்வன் அவரை வழிமறித்தான். சுந்தரர், உடனே தம்மிடத்திருந்த பொன்பொதிந்த உருத்திராக்க மாலையையும், மூக்குக் கண்ணாடியையும், பொற்சரிகைப் பட்டாடையையும், பெட்டகத்தையும் தாமாகவே அக் கள்வனிடம் அளித்தார். கள்வன் களிப்புடன் போனான். சுந்தரர், திருமுருகாற்றுப்படையை ஓதியவண்ணமே வழி நடந்துகொண்டிருந்தார். மறுகணத்தில் யாரோ ஒருவன் 'அம்மா'வென்று வாய்விட்டலறிய ஒலி கேட்டுத் திரும்பிச் சென்றார். தம்மிடம் கொள்ளையடித்த கள்வன் ஒரு துடி துடித்துத் தரையில் வீழ்ந்து மாண்டு கிடப்பதையும், தம் பொருள்களும், பெட்டகமும் அக்கள்வன் பக்கத்திலேயே இருப்பதையும் அவர் கண்டார். தம் பொருள்களை எடுத்துக்கொண்டு செல்லும்போது, அக்கள்வன் முருகப் பெருமான் செயலால்தான் மாண்டான் என்று எண்ணி, அப்பெருமானை மனத்தே தொழுது, அவர் திருவருட் செய்கையை வியந்து மகிழ்ந்தார். இவ்வாறு, சுந்தரர் வாழ்வில் எதிர்பாராத பல நிகழ்ச்சிகள் நடந்தன. எல்லாம் இறைவன் பெருங்கருணை என்று எண்ணி, அவனருளைப் பாடிப்பாடி மகிழ்ந்தார்.

## கo. துறவுக் கோலர்

சுந்தரர் பெரும் புலவர். சிறந்த சைவப்பற்றும், ஒழுக்கமும், பண்பும் நிறைந்த பெருந்தகை. தமிழ்க்கடலின் பேருருவம். எனினும், அவர் வாழ்வை நினைந்தால் நம் உள்ளம் பெரிதும் துன்புற்று மாழ்கும். அத்தகைய பெருந் துன்பங்களிலும் அவர் மனவமைதியுடன் 'இறைவனின் கருணை அவ்வாறாயின் யான் என்செய்வது?' என எண்ணி அவனருளையே சிந்தித்து நின்றார். துன்பங்கள் அவர் மனதை வாட்டியிருக்கத்தான் வேண்டும். ஆனால், நம்போலன்றிச் ' சுடச்சுட ஒளிரும் பசும்பொன் போன்று'

கற்பரசியான அவர்தம் அருமை மனைவியாரும், அவரும் இல்வாழ்வு நடத்தத் தொடங்கிய நாளிலிருந்தே வறுமையும் உடன் தொடர்ந்தது. உலக இன்பங்கள் அவருக்குக் கிடைக்கவில்லை. அதற்காக அவர் வருந்தவுமில்லை. ஏதோ தனக்குக் கிடைத்ததைக்கொண்டு தம் வாழ்வை நடத்திவந்தார். தமிழ்நூற் பயிற்சியும், மாணவர் குழாமும், இறையன்பும் அவர் வாழ்வின் பற்றுதலையும், அதனை யெண்ணுவதாலேற்படும் துன்பங்களையும் நீக்கின.

எனினும், உள்ளம் வெடித்துவிடும் பெருந்துன்பங்கள் பல அவரை அடுத்தடுத்துத் தொடர்ந்தன. அருமையாகப் பெற்றெடுத்து ஆர்வமுடன் வளர்த்துவந்த அவர்தம் முதன் மகள் சிவஞானம் (கி. பி. 1900-ல்) இறையடி சேர்ந்தாள். அதற்குப்பின் 1908-ஆம் ஆண்டு அவர்தம் ஒரே மகன் சிவபூஷணம் மறைந்தான். இரு பெரும் பிரிவுகளாலும் உளம் கலங்கியும் இறைவனருள் என்று எண்ணினார். எஞ்சிநின்ற ஒரே மகளான சிவநேசத்தின் பால் பேரன்பு காட்டினார். அடியார்களையே இறைவன்

சோதிப்பான் என்பது உண்மையல்லவா? சிவநேசத்திற்கு மணஞ்செய்து மருமகளோடு கண்டு களித்துக்கொண்டிருந்த சுந்தரருக்கு நெடுங்காலம் அவ்வாய்ப்பை இறைவன் அளித்தானில்லை. சிவநேசமும் அவள் கணவனும் அடுத்து உலக வாழ்வை நீத்தனர். வாழ்வின் ஊன்றுகோல்களாகிய தம் வழித்தோன்றல்கள் ஒவ்வொருவரையும் இழந்துநின்ற சுந்தரரின் ஒரே பற்றுதலான அவர்தம் மனைவியாரையும் இறைவன் தன்பால் சேர்த்துக்கொண்டான். சுந்தரர் தனிமையானார். இல்வாழ்வின் பற்றுதல்கள் அனைத்தும் அவரைவிட்டு நீங்கிவிட்டன. யாருக்காக இனி அவர் வாழவேண்டும்? எனவே, இறைவன் புகழ், அவன் கருணை இவற்றையே பாடிப் போற்றி வாழ்வுபெற அவருள்ளம் விரும்பியது. மக்களுக்கு அவரின் இயல்பான சைவத் தோற்றமும், சைவப்பற்றும், இறைவனின் பேரிற் கொண்ட காதலும் அவரை இல்லறத் துறவி என்ற நிலையில்தான் இதுவரை எண்ணச்செய்தன. அவர் வாழ்க்கையில் இடையிடையே தம் குடும்பத்திற்காகப் பணி மேற்கொள்ள வேண்டியிருந்த பற்றுக்கள் நீங்கியதும், தம் முழுப்பணியையும் மக்களுக்கே செய்ய உதவும் நிலையை விழைந்தனர் நம் புலவர்பெருமான். எனவே, முறையாகத் துறவு பூண்டு விடுவதென எண்ணினார்.

தம் கருத்தின்படியே காஞ்சிபுரம் மெய்கண்ட சந்தான ஞானபீடத்திலிருந்த ஞானப்பிரகாச சுவாமிகளிடம் சென்று துறவு நிலையினை ஏற்றுக்கொண்டார். ‘கலியாண சுந்தர யதீந்தரர்’ என்ற பெயருடன் அங்குச் சென்று சைவச் சொற்பொழிவுகளும், திருத்தொண்டுகளும் ஆற்றிக்கொண்டிருந்தார். சங்கங்கள் பலவும், மக்களும் யதீந்தரரை விரும்பி வரவேற்று, அவர் திருவாய் அருண்மொழிகளைக்கேட்டு இறையன்பு பூண்டு திளைத்தனர். சைவ

உலகம் தனக்கு மீண்டும் ஒரு நாயனாரைப் பெற்றோம் என எண்ணி எண்ணி மகிழ்ந்தது. பேராசிரியர் மறை மலையடிகள் போன்ற பலரும், அடிகள் (நம் சுந்தரர்) தொடக்க நாளிலிருந்தே சைவத்திற்கும் தமிழுக்கும் ஆற்றிய பெருந் தொண்டுகளின் சிறப்புகளைப் பாராட்டிப் புகழ்ந்தனா

## கக. இறுதிக்காலம்

1918-ஆம் ஆண்டில், நம் சுவாமிகள் சென்னை அருணாசல ஈசுவரர் திருவிழாவின் ஏழாவது நாள் நடை பெற்ற தேரோட்டத்தன்றைக்கு திருத்தேரின் பின்னே போய்க்கொண்டிருக்கையில், பெருங்கூட்டத்தின் இடை யில் வந்த வண்டி ஒன்று அவர் பாதத்தின்மீது இவர்ந்து சென்றது. அப்போது அவர் இடக்கால் சிறுவிரல் நசுங்கப்பெற்றதால், பெரியதோர் இடர்ப்பாடு வரப் பெற்றார். பின்னர் அந்நோய் மிகுதியால், அவர் உடம்பு வரவர மெலிவடைந்தது. நோய் குறையும்வகை எத்த னையோ செய்தும் பயனற்றுப்போயின. அந்நிலையைக் கண்டு சுவாமிகளின் மாணவர் கூட்டமும், தமிழ்ப்புலவர் களும், சைவஅன்பர்களும், மிகவும் மனம் கவன்றார்கள். அந்நிலையில் நம் சுவாமிகளின் உள்ளத்தில் சிவானந்தத் தேன் தோய்ந்து இனிக்குமாறு, இரவுபகலாகத் தமிழ்வேத மாகிய தேவாரம், திருவாசகம் ஓதப்பெற்றன. இறுதியில், நம் சுவாமிகள் காளயுக்தி ஆண்டு, மார்கழித்திங்கள், பதி னான்காம்நாள் விசாக ஓரையில், (28-12-1918) முழுமுதற் செழும்பொருளாகிய சிவபெருமான் செம்மலர்ச்சேவடி நீழல் இன்பத்தை எய்தினார்.

அதுகேட்டு உள்ளம் பதைத்தனர் எண்ணிலாமக்கள். அத்துன்பத்தை எடுத்துரைக்க இயலாது. வைகறை

புலர்ந்ததும், நம் சுவாமிகள் இறைவன் இணையடிகளை அடைந்த துன்பச் செய்தி ஆங்கிலப் பத்திரிகையிலும், தமிழில் பல துண்டு அறிக்கைகளிலும் எங்கும் பரப்பப்பட்டன. சென்னையிலும், அதன் அண்மையிலுமுள்ள ஊர்களிலும் இருந்து புலவர்களும், சைவசபையார்களும், பிறரும் ஒருங்கு திரண்டு வந்திருந்தனர்.

மாலை ஐந்து மணிக்குமேல் மிகுந்த அழகுடன் அமைக்கப்பெற்ற பெரியதோர் பூப் பல்லக்கில் நம் சுவாமிகளது திருவுடல் அமர்த்தப்பட்டது. சைவசித்தாந்தப் புலவர்களும், ஏனைய புலவர்களும், சைவ அன்பர்களும், மாணவர்களும், நண்பர்களும், பொதுமக்களும் ஆயிரக் கணக்காகத் திரண்டார்கள். அப்பெருங்கூட்டம் கடலெனக் கண்ணீர் சோரப் பின்தொடர்ந்தது. சுவாமிகளின் அருமை மாணவர்கள் பூப் பல்லக்கைத் தோளில் சுமந்து சென்று, திருவொற்றியூரில் அவர் பொன்னுடலை அடக்கம் செய்தார்கள்.

சுவாமிகளது சமாதி நிலையம் அவர் தமையனார் புதல்வர், சிவபாத முதலியார் அவர்களால் திருவொற்றியூரில் அழகாக அமைக்கப்பட்டது. 'மணி அழகர் மண்டபம்' என்ற பெயருடன் இன்று வழங்குகின்றது.

"செஞ்சடிலனார் மதியணிந்த சிவனடிக்கே பதித்தநெஞ்சம்
மன்னியதாய் மார்பிலுறு மணியழகும் மாவிழியில்
பொன்னமர்ந்த கண்ணருடி பொருந்தழகும் பிறங்குமெழில்
கன்னுதலின் நீற்றழகும் காவலனே! விழைகுவமே".

# இரங்கற்பாக்கள்

"கண்ணுள்ளா யென்னிரண்டு கருத்துள்ளாய் காதன்மனை
வெண்ணுள்ளாய் செய்தொழிலின் எதிருள்ளா யெய்கொளித்தாய்
மண்ணுள்ளாய்த் தேடியமான் மனத்துள்ளா னிடத்துள்ளாய்
எண்ணுள்ளார் மணவழக எங்கொளித்தா யெதிரற்றேயே." (1)

முத்தமிழ் ரத்நாகரம் பாநுகவி சுவாமிகள்

"மான்மருவு கரமுடையான் மதிமருவு சிரமுடையான் மலரடிக்கே
ஊன்மருவு மன்புடையாய்! உரமருவு மின்புடையாய்! உலவாச் சீர்த்தி
தேன்மருவு தமிழுடையாய்! திசைமருவு புகழுடையாய் சிவத்தியானப்
பான்மருவு கலியாணசுந்தரமாம் பெயர்மருவு பாவலோனே". (2)

"சித்தாந்த சைவமணம் மணக்கவரும் பிரசங்கம் செய்திங் கென்றும்
சத்தான நிலைநாட்டி யுலகுய்யப் பெரும்பயனைச் சாதித் தாயே
மத்தான துடைதயிர்போல் யாங்கலங்க நீயகன்ற வனைப்பிங் கென்னே
இத்தான நிலையீதென் றெல்லோர்க்கு முணர்த்தினையே இனிமை
[யோனே".

காஞ்சி மகாவித்துவான், இராமசாமி நாயுடு

"வாய்மைபெறு வேளாளர் செய்தவமே யுகுத்ததெனை வகுப்ப யாருந்
தூய்மைபெற வுலகுதித்த கலியாண சுந்தரப்பேர் சுகுணமேலோ!
தாய்மைபெறு பெரும்புலவா! தமிழோடு சித்தாந்தம் தழையச் செய்த
மாய்மையறு புகழ்படைத்த குருமணியே! நின்னருமை மறக்கற்
[பாற்றோ".

காஞ்சி நாகலிங்க முதலியார்

"இன்புமொழி யன்புருவா மிணையிலிறை பொன்னடிக்கீழ்
துன்பொருவ இன்புருவாய்த் திகழ்ந்தனையோ? தூயசிவ
மன்பெரிய சமயத்தின் மகிழ்நிலையை யெனக் குணர்த்த
உன்பெரிய மலரடியை யொருமையுடன் தொழுதேனே"!

மணி. திருநாவுக்கரசு முதலியார்.

"அம்மாவென் றெனைவிளித்தங் கருள்ததும்பு மின்மொழியால்
கைம்மாறொன் றுடையான்றன் கருணையமு தெடுத்தூட்டும்
பெம்மானே கலியாண சுந்தரனும் பேராளா!
எம்மானே யதீந்திரவோ! இறைவனடி யெய்தினையோ!" (6)

வித்துவான், பாரிப்பாக்கம் கண்ணப்ப முதலியார்



*தமிழ்ப் பேராசிரியர்*

**கா. நமசிவாய முதலியார்**

### தமிழ்ப் பேராசிரியர்

# 2. கா. நமசிவாய முதலியார்

## க இளமைக்காலம்

### தோற்றம்

செந்தமிழ் நாட்டிலே தோன்றிய தமிழ்ப் புலவர்களில் கல்விச் செல்வமும், பொருட்செல்வமும், அருட்செல்வமும் ஒருங்கே பெற்று, இன்பமாக வாழ்ந்த பிற்காலத்துப் புலவர் திரு. கா. நமசிவாய முதலியார். அவர் பொன் மாளிகையில் திருமகளும் குடிபுகுந்தாள், கலைமகளும் தனியாட்சி புரிந்தாள். "உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ" என்று ஒரு அரும்பெரும் புலவர் கூறினார். அவ்வுண்மையை நிலைநாட்டியவர், 'அண்மையிலிருந்த நமசிவாய முதலியாரே என்று கூறலாம். அவர் தம் உழைப்பின் பயனாலும், திருமகளின் அருளின் மாட்சியாலும், சென்னையின்கண் உள்ள திருமயிலையில் "கடலகம்" என்னும் இனிய பெயர்கொண்ட விசால மாளிகையை நிறுவினார். தமிழ்ப் புலவர்களுக்குள் மன்னன்போல் உயர்ந்த வாழ்க்கையைப் பெற்று நல்லின்பம் எய்தியவர் இப்புலவர் ஒருவரே.

வட ஆற்காடு ஜில்லாவில் உள்ள காவேரிப்பாக்கம் என்னும் ஊர் நீர்வளமும், நிலவளமும், குடிவளமும் மிக்கது. அழகிலும் சிறந்தது. அதன் அழகை அதிக அழகுபடுத்துவது அங்குள்ள பரந்து விரிந்த, ஆழம் மிகுந்த கடல்போல் காட்சி அளிக்கும் ஒரு மாபெரும் ஏரி. ஏரிக்

கரையின்மீது நின்று, நீர் நிறைந்திருக்கும் காலத்தே, இருபுறமும் நோக்குவார்க்கு உண்டாகும் இன்பம் இத்தன்மைத்தென்று சொல்லவியலாது. கடல்போற் பரந்து, கண்களுக்கு எட்டாத்தூரம் நீர்நிலவியிருக்கும் காட்சியும், பச்சைப் பசேலென விளங்கும் பசுமைநிறத் தவழ்ப் பட்டாடைகள் பரப்பி இருப்பதுபோற் பசும்பயிர்கள் நல்கும் காட்சியும் ஒப்பற்றவை.

மேற்கூறிய காவேரிப்பாக்கத்தில், உயர்வேளாண் குடியில் இராமசுவாமி முதலியார் என்னும் புண்ணியப் பெருந்தகை வாழ்ந்துவந்தார். அவர் நற்குணமும், நல்லொழுக்கமும் பெற்று, ஆசிரியர் தொழிலே மேற்கொண்டு, குறைந்த ஊதியமே பெற்றுத் தம் இல்லற வாழ்க்கையை இனிது நடாத்திவந்தார். ஊரார் எல்லோராலும் நல்லாசிரியர் எனப் போற்றப்பட்டும் வந்தார். அவர் ஒரு பாடசாலையை அவ்வூரில் தாமே ஏற்படுத்திச் சிறுவர்களுக்குக் கல்விச்செல்வம் நல்கி வந்தார். அவர் செழுந்திரு மனைவியாராகிய, அகிலாண்டவல்லி அம்மையார், கற்பிற் சிறந்து, குணத்திற் பொலிந்து, பணவாசையின்றிப் பெருமையுடன் கணவன் சொல் கடவாது, மனையின் விளக்காகச் சிறந்து விளங்கினார். 'பத்தாவுக்கேற்ற பதிவிரதை'யென்றால்,'அகிலாண்டவல்லி அம்மையாரே' என்று மாதர்கள் சொல்லிக்கொள்வார்கள். அத்தகைய சிறந்த தாய், தந்தையரின் அருமை மைந்தராக, நமசிவாய முதலியார், 1876-ஆம் ஆண்டு, பிப்ரவரித் திங்கள், 20 ஆம் தேதி, வெள்ளிக்கிழமை இரவு, 10-30 மணிக்கு, இத்தமிழ் நாடு செய்த தவப்பேற்றின் பயனாய்த் தோன்றினார். முதலியார் பிறந்த அகம் பொன்னகமாயிற்று. ஆண்டு மகிழ்ச்சி வெள்ளம் கரைபுரண்டு ஓடிற்று. தாய், தந்தையர் இருவரும் இன்பக்கடலில் திளைத்தனர்.

## தமிழ்க் கல்வி

நமசிவாய முதலியார் தமது இளமைப் பருவத்தில், தம் தந்தையின் பாடசாலையிலேயே கல்விகற்கத் தொடங்கினார். அவர் தம் தந்தையிடத்திலேயே சின்னஞ்சிறு தமிழ் நூல்கள் களிப்புறக் கற்றார். விவேகசிந்தாமணி முதற் கொண்டு திருப்புகழ் வரையில் தம் தந்தையிடமே கேட்டுச் சிந்தை மகிழ, அச் சிறுவயதிலேயே தமிழறிவு வளர்ந்தைப் பெறப்பெற்றார். அவர்தம் 15-ஆம் வயது வரையில் தமது ஊரிலேயே தமிழ்க் கல்வியை உரமாகக் கற்றுவந்தார். அவர் இல்லத்தில் அதுபோழ்து, அகனமர்ந்து செய்யாள் உறையவில்லை. பொருட்குறைவு தம் மனையில் இருக்கக் கண்ட நமசிவாய முதலியார், சென்னைமாநகரை அடைந்து, தமது குடும்ப வாழ்க்கையைச் செம்மைப்படுத்த எண்ணினார். அக்காரணத்தால் அச்சிறுவயதிலேயே, முதலியார் 1891-ஆம் ஆண்டில் சென்னையிலுள்ள தண்டையார் பேட்டையிலிருந்த ஓர் ஆரம்பப் பாடசாலையின் ஆசிரியராய் அமர்ந்தார். அவ்வயதில் அவர் ஆசிரியரானது எல்லோர்க்கும் வியப்பையே உண்டு பண்ணிற்று. இப் பாடசாலையில் மாணவர்களுக்கு ஏற்ற சின்னஞ்சிறு ஆசிரியராக முதலியார் காணப்பட்டார். அவரிடத்தே மாணவர்கள் அளவிறந்த அன்புகொண்டார்கள்.

## உ. மகாவித்துவான் சண்முகம் பிள்ளை அவர்களிடம் கல்வி

அப்போது சென்னைத் தொண்டைமண்டலம் துளுவ வேளாளர் பாடசாலையில், தமிழாசிரியராக இருந்தார் மகாவித்துவான் சண்முகம் பிள்ளை. அவர்களைப்பற்றி முதலியார் கேள்வியுற்று, அவர் பெரும் புலமையைப் பெரிதும் வியந்தார். அவரிடம் தமிழில் செழும் புலமை தாமும் பெறவேண்டுமென்று விரும்பினார். சண்முகம் பிள்ளை விழுத்தகு புலமைபெற்று விளங்கியதோடு, அருங் குண மாட்சியும், அன்பும், அருளும்பெற்று விளங்கினார். அத்தகைய பெருங்குணப் பெரும்புலவரை நமசிவாய முதலியார் இறைவன் அருளால் ஆசிரியராகப் பெற்றார். அதுபோழ்தே தமிழ் அன்னையின் தண்ணருளும் அவர் பால் சேர்ந்தது.

மகாவித்துவான், சண்முகம் பிள்ளை ஒழுக்கத்தின் விழுப்பத்தை அறிந்த அருங்குணச் சீலர் ஆதலால், அவர் தம் மாணவர்களுக்கு இரண்டு கட்டுப்பாடு விதிப்பது வழக்கமாக இருந்தது. அவை, தமக்கு மாணவராக இருப்பவர் மதம் காரணமாகப் போர்களிலும், சாதிச் சண்டைகளிலும் நுழையக்கூடாதென்பதும், தாம் அனுமதி அளிக்கின்ற வரையில் தாமாக எவ்விதப் பாடலை யும் அம்மாணவர் இயற்றுதல் கூடாதென்பதும் ஆகும். அவைகளுக்குக் கட்டுப்பட்டார் நம் நமசிவாயர். அப்பால் சண்முகம் பிள்ளை நம் முதலியாரை மனமகிழ்ச்சியுடன் சென்னை முத்தியால்பேட்டையிலுள்ள, மல்லீஸ்வரர் கோவிலுக்கு அழைத்துச் சென்றார். அங்குள்ள முருகப் பெருமானுக்கு நமசிவாயரின் பேரால், தம் செலவிலேயே அர்ச்சனை செய்வித்தார். முருகப்பெருமான் திருவருளி

னும் ஆணை பிறப்பித்தார். இவ்வாறு நமசிவாயர் ஓர் அரும் பெருந் தமிழ்ப்புலவரின் கூட்டுறவையும், அவ்வயதிலேயே முருகப்பெருமான் திருவருளில் அழுந்திய பற்றையும் பெற்றுத் திகழ்ந்தார்.

நமசிவாயர் தம் ஆசிரியராகிய சண்முகம் பிள்ளை அவர்களிடம் சுமார் பதின்மூன்று ஆண்டுகள் வரையில், பலதிறப்பட்ட இலக்கிய நூல்கள், இலக்கண நூல்கள், சங்கநூல்கள், காவியங்கள் முதலியவற்றைக் கசடறக் கற்றுப் பண்டைக்காலத்துத் தமிழ்ப்புலவர்போல், அழுத்தமான தமிழறிவுபெற்றுத் திகழ்ந்தார். நம் முதலியாருக்கு வேறு ஒரு பெரும்பேறும் கிடைத்தது. சண்முகம் பிள்ளை அவர்களுக்குப் பிள்ளைப்பேறின்மையால், தம்பால் நல்லிறந்த அன்புசெலுத்திவந்த நமசிவாயரையே தாம் இறந்த பின்னர், தமக்கு ஆற்றவேண்டிய இறுதிக் கடனை ஆற்றவேண்டும் என்று கூறினார். நற்குணத்தின் குன்றாகிய நமசிவாயர் தம் ஆசிரியரின் விருப்பின்படியே அவர் விண்ணுலகுற்றபோது, இறுதிக்கடனையெல்லாம் தாமே செய்தார். தம் ஆசிரியரின் மனைவியாரையும் தம் அருமை அன்னையாராகவே கருதி, அவ்வம்மையார் இம்மண்ணுலக வாழ்வைவிட்டு நீங்கும் வரையில், அவருக்கு வேண்டிய பொருளுதவி புரிந்து, அவருக்கு ஈமக் கடன்களும் ஆற்றி, ஓர் உத்தம மைந்தன்போலவே நடந்து கொண்டார்.

## ரு. ஆசிரியத்தொழில்

நமசிவாயர் கருவிலேயே ஆசிரியத்தொழிலின் ஆற்றலைப் பெற்றிருந்தார் என்று சொல்லுதல் மிகை யாகாது. 'தொழில்கள் எல்லாவற்றிலும் சிறந்தது உழவுத் தொழில்' என்று அறிஞர் கூறுவர். அத்தொழிலினும் சிறந்த, கடவுள் தன்மை நிறைந்த தொழில், ஆசிரியத் தொழிலே. ஆசிரியராக இருப்பவர் மாணவர்கள் மூல மாக உலகையே சீர்திருத்தம் செய்யும் ஆற்றலைப் பெற் றிருக்கிறார்கள். அவர்கள் மாணவர்களுக்கு ஆசிரியராக மாத்திரம் இல்லை; கண்கண்ட கடவுளராகவும்இருக்கிறார்கள். அவர்களுக்குள்ள மதிப்பும், பேரும், புகழும், சீரும், சிறப்பும் வேறு எத்தகைய தொழிலை மேற்கொண்ட மக்க ளுக்குமில்லை. ஆதலால், நமசிவாயர் ஆசிரியத் தொழிலையே புரியப் பேரவாக்கொண்டார். இருப்பினும், 1895-ஆம் ஆண்டில், அவர் பொருள் காரணமாகத் தம் விருப்பிற்கு மாறாகச் சென்னை நீதி மன்றத்தில் ஒரு சிறிய அலுவலை ஏற்கவேண்டியவரானார். ஓராண்டுவரை நமசிவாயர் தொல்லை மிகுந்த, அந்த அலுவலைப் பார்த்துவந்தார்.

### 'செயின்ட் சேவியர்' பள்ளியில்

பின்னர் அவர் விரும்பியவண்ணமே சென்னை பிராட்வேயிலுள்ள செயின்ட் சேவியர் உயர்நிலைப்பள்ளி யில் தமிழாசிரியர் பதவியைப் பெற்றார். அப்போதுதான் புழுங்கியிருந்த அவர் மனம் குளிர்ச்சி அடைந்தது. கல்வித் துறையில் எந்நேரமும் காலத்தைக் கழிக்கத் தமக்கு வாய்ப் புக் கிடைத்ததைத் முதலியார் எண்ணி, எண்ணி மகிழ்ந்தார். பாடசாலையே அவருக்கு எல்லா நலங்களையும், இன்பங்களை யும் அளிக்கவல்ல இடமாகத் தோன்றிற்று. சிறுவர்

களின் இயல்புக்கு ஏற்பப் பாடம் சொல்லி, அவர்களைப்
பரவசப்படுத்தி அரும்பெயர் பெற்றார். பிற ஆசிரியர்கள்,
தமிழாசிரியருக்கும் பெருமதிப்பு பாடசாலையில் பிள்ளைகள்
அளிப்பார்கள் என்று அப்போதுதான் கண்டார்கள்.
போதிக்கும் வன்மையாலும், அன்பு கனிந்த மொழிகளா
லும் முதலியார் மாணவர்கள் உள்ளங்களில் குடிபுகுந்தார்.
அவர் இன்முறுவலுக்கும், தேனினும் இனிய செம்
மொழிகளுக்கும் வயப்பட்ட பிள்ளைகள், அவரைப் பெரி
தும் போற்றினார்கள். அப்பாடசாலையில் நான்கு ஆண்டு
கள் ஆசிரியத்தொழிலை நடாத்திச் சிறுவர்களுக்கு ஏற்ற,
ஒரு சிற்றிலக்கணத்தையும் எழுதி வெளியிட்டார். அது
காறும் தமிழில் மாணவர்களுக்கு ஏற்ற சிறு இலக்கணநூல்
வெளிவாராமையால், அவர் எழுதிய அச்சிறுநூலை எல்லா
மக்களும் பெரிதும் புகழ்ந்தார்கள். அவர் ஆங்கிலப் பாட
சாலையில் ஒரு தமிழாசிரியராக அமர்ந்து, ஒழுங்கையும்,
திட்டத்தையும் வகுப்புக்களில் நிலைச் செய்தார். ஆதலால்,
அவர் போதிக்கும் வன்மையைப் பிற ஆங்கிலப் பாடசாலை
களின் அதிகாரிகளும் அறியலானார்கள்.

## 'நார்த்விக் மகளிர்' பள்ளியில்

சிறுபிள்ளைகளின் உள்ளங்களில் குடிபுகுந்த முதலி
யாருக்குப் பிறிதொரு நல்ல வாய்ப்புக் கிடைத்தது. அதா
வது, சென்னை இராயபுரத்திலுள்ள, "நார்த்விக்" பெண்
கள் பாடசாலையில், அவருக்குத் தமிழாசிரியர் பதவி
கிடைத்தது. தங்கள் தந்தைபோல் கனிவுடன் இன்மொழி
கூறிக் கல்வியில் களிப்பை ஊட்டும் முதலியாரைக் கண்ட
மாணவிகள் கழிபேருவகை எய்தினார்கள். பிள்ளைகளின்
மனப்பான்மையை எங்ஙனம் செவ்வனம் அறிந்து நமசி
வாயர் கல்வி கற்பித்தாரோ, அங்ஙனமே மாணவிகளின்

மனப்பான்மையையும் செவ்விதின் அறிந்து, அவர்கள் உள்ளம் உவப்பக் கல்வி கற்பித்தார். பெண்கள் தங்கள் கல்வியை மேலும், மேலும் விருத்தி செய்ய, அருந்தமான அவாவை அவர்கள் உள்ளத்தில் நிலைச் செய்தார். அப் பாடசாலையில் முதலியார் ஒருவரே தாம் விரும்பிய நல்லாசிரியர் என்று மாணவிகள் பெரிதும் புகழ்ந்தார்கள்.

## 'சிங்கிலர்' கல்லூரியில்

முதலியார் அவர்கள் முதன்முதலாகச் சிறுபிள்ளைகளின் மனத்தில் தமிழ்ப்பற்றை நிலைச்செய்து, பின்னர் சிறு மாணவிகள் உள்ளங்களிலும் தமிழாசையை நிலைக்கச் செய்யும் பெரும்பேற்றைப் பெற்றார். அதன் பின்னர், வயதில் முதிர்ந்த மாணவர்களுக்கும், மாணவிகளுக்கும் உயர்தரக் கல்வி கற்பிக்கும் வாய்ப்பையும் பெற்றார். மேற்கூறிய பெண்கள் பாடசாலையில், சில ஆண்டுகள் தமிழாசிரியராக இருந்து, பெரும்பேர் பெற்று, முதலியார் விளங்குகையில், சென்னைக் கடற்கரையோரத்தில் அப் போது 'சிங்கிலர்' கல்லூரி என்று ஒரு கல்லூரி திகழ்ந் திருந்தது. அதற்குத் தமிழாசிரியராக சடகோபராமானுசாச்சாரியார் என்பவர் இருந்துவந்தார். அவர் ஆறு மாத காலம் விடுமுறை எடுத்துக்கொண்டு, வெளியூருக்குச் செல்லுகையில், நமசிவாயரே அப்பதவிக்குத் தகுந்தவர் என்று அக் கல்லூரியின் தலைவர் கேள்வியுற்று, அரு முயற்சி செய்து, அவரையே தம் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக நியமித்தார். அவ்வவ்வயதிற்கு ஏற்ப, மாணவர்களுக்கும், மாணவிகளுக்கும் கல்வி கற்பிக்குந் திறமையில் ஒப்பற்று விளங்கிய நம் முதலியார், அக் கல்லூரியிலும் இணையில்லா ஆசிரியர் நமசிவாயரே என் னும் பெயரை எளிதில் பெற்றார். சிறுவர்கள் முதலியாரின்

கற்பிக்கும் ஆற்றலில் மயங்கியதுபோல், வயது முதிர்ந்த அந்நாள் ஆசிரிய மாணவர்களும் மயங்கினார்கள். அவர்கள் முதலியார் வருகையைத் தங்கள் வகுப்புக்களில் ஆவலுடன் எதிர்பார்த்திருப்பார்கள். அவர் வகுப்பு நடைபெறுகையில், மாணவர்கள் தங்களை முற்றிலும் மறந்து, முதலியாரின் பணி மொழிகளில் மயங்கிப் பரவசம் அடைவார்கள். முதலியாருக்குப் புலமை நிறைந்திருந்தது போல், நுண்ணறிவும், பொது அறிவும் நிறைந்திருந்தன. ஆதலால், இடத்திற்கு ஏற்பவும், மாணவர்களின் மனத்திற்கு ஏற்பவும், பாடங்களை இன்பமாகக் கற்பித்து நமசிவாயர் நற்கீர்த்தி பெற்றார்.

'எஸ். பி. ஜி.' உயர்நிலைப்பள்ளியில்

நமசிவாயர் ஆசிரியத்துறையிலே படிப்படியாக உயர்ந்து சிறக்கின்ற தன்மையில், இறைவன் அவருக்குத் தகுதியுள்ள பதவியான தமிழாசிரியர் பதவியைச் சென்னை, வேப்பேரியிலுள்ள, 'எஸ். பி. ஜி.' உயர்தரப் பாடசாலையில் அருளினான். இப்பாடசாலையிலிருந்துதான் நம் முதலியார் மிக உயர்ந்த நிலையைப் பின்னர் அடையலானார். வழக்கம் போல் அப்பாடசாலையின் மாணவர்களும் முதலியாரின் கற்பிக்கும் வன்மையில் வியப்பும், களிப்பும் கொண்டு, அவர் வசமானார்கள். அப்பாடசாலையின் தலைமை ஆசிரியராக அப்பொழுது விளங்கியவர் "பாட்ஸ்" என்னும் துரைமகனார். அப்பாதிரியார் அறிவின் களஞ்சியம்; அன்பின் சிகரம். அவர் முதலியாரின் கல்வி மாட்சியையும், கற்பிக்கும் வன்மையையும் கண்டு, அவரிடம் பெருமதிப்பும், பேரன்பும் கொண்டார். அப்பாதிரியார் நம் முதலியாருக்குச் செய்த சிறந்த உதவியை இத்தமிழ் உலகமே பாராட்டக்கூடியது. ஏனெனில், அப்பாதிரியார்

செய்த பேருதவியால்தான் நமசிவாயர் பிற்காலத்தில் மிக உயர்ந்த நிலையை எய்தினார். அக்காரணத்தால்தான் முதலியார் மாணவர்களுக்கு அதுகாறும் எவரும் செய்யாத ஒப்பில்லாத் தொண்டையும் ஆற்ற முடிந்தது.

நமசிவாயரின் அருமுயற்சி

அக்காலத்தில் தமிழ் மாணவர்களுக்கு ஏற்ற பாடப் புத்தகங்கள் எழுதப்படவில்லை. அது பெருங் குறையாக இருந்தது. அக்குறையை நீக்க நமசிவாயர் முன் வந்தார். அவ்வவ் வகுப்பிற்கு ஏற்ப, மாணவர்களின் உள்ளம் கசியும்வண்ணம், அருமையான தமிழ்ப் பாடப் புத்தகங்கள் நம் முதலியார் எழுதத் தொடங்கினார். அழுக்காறும், சுயநலமும் கொண்ட சில தீய நெஞ்சினர்கள், முதலியார் அவ்வாறு ஆசிரியத்தொழிலைச் செய்து கொண்டு, புத்தகங்கள் எழுதுதல் கூடாது என்று பற்பல இன்னல்கள் விளைவித்தார்கள். அவர்கள் உள்ளம் நாணும் படி, "பாட்ஸ்" என்னும் பாதிரியார், அத்தடைகளை எதிர்த்து, அருமுயற்சி புரிந்து, 'தகுதியுடைய அறிஞர் எவரும் பாடசாலைகளுக்கு ஏற்ற நூல்களை எழுதலாம்' என்ற கொள்கையை அரசாங்க மூலமாகவே நிலைநாட்டினார். அப்பாதிரியார் செய்த இப்பேருதவிதான் நமசிவாயர் பின்னர் பலவகைப்பட்ட நூல்களை எழுதிப் பெரும் பொருள் ஈட்டிப், பேர் அறம் புரிந்து, பெரும்புகழ் எய்துவதற்கு உதவியது.

# 9. இல்லற வாழ்க்கை

## வாழ்க்கைத்துணைவியார்

நமசிவாய முதலியார் இளமையிலேயே தமிழ் ஆசிரிய ராவதுமன்றி, நூலாசிரியராகவும் பொலிந்து திகழ்ந்தார். இவ்விதவாய்ப்புக் கிடைத்தல் அருமையினும் அருமையே. அவர் நெடுங்காலம் போதிய பொருட் செல்வமின்றித் தமது வாழ்க்கையை நடத்திவந்தார். ஆனால், பொருள் இல்லாக்குறை முதலியாருக்கு அப்போதுதான் நீங்கி யது. வாழ்க்கை வளமாகச் சிறக்கும் நாளில்தான் நமசி வாயர் 1906-ம் ஆண்டில் திருமணம்புரியலானார். அவர் விருப்பிற்கு ஏற்ற, பண்பாண்மைக்கும் பொருந்திய மண மகள் அவருக்கு வாய்த்தார். கேசவ முதலியார் தம் செல்வப்புதல்வி, தங்கம்மாள் என்னும் இளவஞ்சிக் கொடியே முதலியாரின் வாழ்க்கைத் துணைவியாக அமைந் தார்.

தங்கம்மாள் பதி சொல் தவறாத பாவை; பத்தா விற்கு ஏற்ற பதிவிரதை; கணவன் நெறி ஒழுகும் காரிகை; விருந்தினரை முகமலர்ந்து உபசரிக்கும் அணங்கு; பொறுமையிலோர் புனிதவதி. இத்தகைய நற்குணங்கள் வாய்க்கப்பெற்ற, அழகு மிக்க, அருங்குண மாதர் திலகத்தை மணந்த முதலியார் இல்லற வாழ்க்கை அன்பும், அருளும், இன்பும், இசையும் பெற்ற நல்லற வாழ்க்கை யாகப் பொலிந்தது.

## விருந்தினரைப் போற்றல்

முதலியார் இல்லறத்தை மேற்கொண்டதும், அதை இனிது நிகழ்த்தும் முறையையும் உடனாகக் கைப்பற்றினார். தமக்குக் கிடைத்த பொருட் செல்வத்தை ஒழுங்காகப்

பகுத்துப் பல நல்லற வழிகளில் செலவு செய்ய ஆரம்பித்தார். முதலாவதாக, "செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்" என்னும் அதிவீரராமர் வாக்கின்படி, தமது ஏழைச் சுற்றத்தார்க்குத் தம்மால் இயன்ற பொருளுதவி செய்ய முன் வந்தார். அவர்கள் தமது இல்லத்தில் வந்து நல் விருந்து அருந்துவதையும் தமது நல்லின்பமாகக் கொண்டார். விருந்தினர் முகம் மலர, பெருங்குணம் பெற்ற, அவர் மனைவியாரும், தம் இல்லம் வந்தவர்களுக்கு விருந்தூட்டுவார். அவர்கள் இருவர் உள்ளமும் விருந்தினரை அமுதூட்டும் தன்மையில் சிறந்து விளங்கினமையால், திருவள்ளுவர் கூறிய,

> "அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
> நல்விருந் தோம்புவா னில்."

என்னும் திருக்குறளின்படி., முதலியார் மனையில் திருமகள் உளமகிழ்ந்து குடிபுகுந்தாள்.

உறவினர்களுக்கு விருந்து அளிக்கும் அறச்செயலில் தலைசிறந்து விளங்கிய நமசிவாயர், தம் நண்பர்களையும், ஏனையோரையும், முக்கியமாகத் தமிழ்ப் பண்டிதர்களையும், தம் மனையில் அவ்வப்போது விருந்துண்ணுமாறு செய்து மகிழ்ச்சி பூத்தார். எந்தவேளையில் எவர் வந்தாலும், அவர் வீட்டில் உணவிற்கும், இன்சுவைத் தேத் தண்ணீருக்கும் குறைவில்லை. நாள் முழுவதும் ஒருவர் பின் ஒருவராக விருந்துண்ண வந்தாலும், முதலியாரின் மனைவியார் சுந்தரம்மாள் அவர்களுக்கு விருந்தளிக்கச் சலிப்பதில்லை. எந் நேரமும் அவர் வீட்டில் காப்பியும், சிற்றுண்டியும் இருந்த வண்ணமாகவே இருக்கும். இத்தகைய அருங்குண அம்மையாரை மனைவியாராகப் பெற்ற நமசிவாயர் இல்லகம் பொன்னகமாயிற்று. பொருள் இல்லையே என்ற

கவலையே முதலியாருக்கு ஏற்படவில்லை. ஏனெனில், அவர் அப்போது எழுதிய சிறு நூல்கள் ஏராளமாகப் பொருட் செல்வத்தை அவர் இல்லத்தில் குவித்தன. இவரைப் போல் சின்னஞ்சிறு தமிழ்நூல்கள் எழுதி, மிகமிகப் பெரும் பொருள் ஈட்டிய தமிழ்ப் புலவர் வேறு ஒருவரும் இலர் என்றே கூறலாம்.

## மாலை வேளைகளில்

நமசிவாயர் தமது பாடசாலையின் வேலை முடிந்த பின்னர், வீட்டிற்கு வந்ததும், காலத்தை வீணாக்கமாட்டார். மனக்களிப்புடனும், மனவுற்சாகத்துடனும், ஏதேனும் ஒரு தமிழ் நூலைப் பாடசாலை மாணவர்களுக்கு ஏற்ப, எழுதியவண்ணமாகவே இருப்பார். அப்போது அவர் மனையில் எப்புலவர் வந்தாலும், எந் நண்பர் வந்தாலும், எம் மாணவர் வந்தாலும் முதலியார் அருவருப்பு அடைய மாட்டார். அப்போதும் இன்முறுவலும் முகமலர்ச்சியும் கொண்டே, அவர்களை வரவேற்பார். அவரவர்கள் தங்களுக்குத் தோன்றிய பல அறிவுள்ள பொருள்பற்றிப் பேசிக்கொண்டிருப்பார்கள். அவைகளை இன்புடன் கேட்டுக்கொண்டே முதலியார் தாம் எழுதும் நூலை எழுதிக்கொண்டிருப்பார். தாம் எழுதிய புத்தகங்கள் அச்சிடப்பட்டு வருபவைகளைத் திருத்தம் செய்துகொண்டிருப்பார். இத்தகைய இல்லற வாழ்க்கை முதலியாருக்கு இன்ப வாழ்க்கையாக இருந்தது; ஏனையோர்க்கு வியப்பாகவே இருந்தது.

## அகம் செய்த தவம்

சென்னைக் கோவிந்தப்ப நாய்க்கன் வீதியில் இருந்த, "காவேரி அகம்" என்னும் இல்லத்தில் தான் அப்போது

நமசிவாயர் குடியிருந்தார். காவேரி அகம் புலவர் அகமாகவும், மாணவரகமாகவும் பொலிந்தது. புலவர்கட்கு விருந்தும், மாணவர்கட்கு மாண்புறு கல்வியும், ஏழைப் பிள்ளைகளுக்குப் பொருளும் அளிப்பதில் முதலியார் ஒரு போதும் தளர்ச்சியடைந்ததில்லை. தம் இல்லம் வந்த எந்த இளவலும், தமிழ்ப்புலவனாகப் பின்னர்த் திகழ்வது எளிதான நிகழ்ச்சியாய்விட்டது. முதலியாருக்கு அழுக்காறு என்பதே கிடையாது; எல்லோரிடத்தும் அன்பும், கனிவும், இரக்கமும் தான் அவர் காட்டுவார்.

## ரு. மக்கட் பேறு

நமச்சிவாயர் இல்லறத்தில் இசையும், இன்பமும் பெற்று விளங்குகையில், இறைவன் இன்னருளால் மக்கட் பேறும் பெற்றுத் திகழ்வாராயினர். அறிவறிந்த செல்வப் புதல்வர்களையும், குணம் நிறைந்த செல்வப் புதல்வியர்களையும் பெற்றுப் பெருமகிழ்ச்சி பூத்தார். மக்களின்பம் ஏனைய இன்பங்கள் எல்லாவற்றிலும் சிறந்தது என்பதைத் தமது இல்லத்திலேயே கண்டார். குழலையும், யாழையும் வெல்வன மழலைமொழிகள் என்பதைக் கண்டு களிப்புற்றார். "மக்கண் மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர், சொற்கேட்ட லின்பம் செவிக்கு" என்று திருவள்ளுவர் எவ்வளவு உண்மையாகவும், நயமாகவும் கூறியுள்ளார்! அதனைத் தம் மக்களிடத்தில் கண்டு மகிழ்ந்ததோடு, திருவள்ளுவரின் பேரறிவையும், நுட்பத்தையும் வியந்து வியந்து மகிழ்ந்தார். தம் மக்களை உயர்ந்த நிலையில், தகுந்த முறையில், மேனாட்டு முறையினைத் தழுவி வளர்த்து வந்தார். அவர் தமிழாசிரியராக இருந்தபோதிலும், மேனாட்டு நாகரிகத்தை ஒருவாறு தழுவியே வாழ்ந்தார் என்று கூறலாம்.

## ௯. பிறர்க்குதவும் பெருந்தகைமை

நமசிவாயர் தம்மை அண்டினோர்க்கு வேண்டிய பொருளைத் தவறாமல் கொடுக்கும் தகைமையாளர். புலவர்கள் சிலர் வறுமை நோயுற்று, அவரிடம் அணுகுகையில், அவர் குறிப்பு அறிந்து, தம்மால் இயன்ற பொருள் கொடுப்பதோடு, அவர்கள் பொருள் ஈட்டும் வழியையும் காட்டிக் கொடுப்பார். சிலரைச் சிறு நூல்கள் எழுதும்படி சொல்லித் தாமே பொருள்பெற்றுத் தருவார். சிலரை ஆசிரியர்களாகப் பாடசாலைகளில் ஏற்படுத்த உதவுவார். பல ஏழைப் பிள்ளைகளுக்கு உயர்தரக் கல்வி அடைய, மாதந்தோறும் தாமே பணங்கொடுத்து உதவி வருவார். பல மாணவர்கள் சம்பளமில்லாமல் கல்லூரிகளில் படிக்கவும் வசதிகள் செய்வார். வறுமையாளரான புலவர் சிலரைத் தம் இல்லத்திலேயே உணவு கொடுத்து ஆதரிப்பார். இத்தகைய நல்லறங்கள் புரிந்து வந்தமையால், பல்லோரும் முதலியாரைப் புகழ்ந்தனர். வள்ளுவர் அருளிச்செய்த,

"பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கட் படின்"

என்னும் திருக்குறளுக்கு இலக்கியமாக நம் முதலியார் விளங்கினார். இவ்வருங் குணங்களைப் புகழ்ந்தே தமிழ்ப் பேராசிரியராக விருந்த, மணி - திருநாவுக்கரசு முதலியார் தாம் பாடி அளித்த வரவேற்பு ஒன்றில், 'நடுவூர் பழுத்த நயன்மர மனையாய்' என்றும், 'அன்னையாய் எவர்க்கும் மன்னிச் சிறந்தோய்' என்றும், 'விருந்தூண்பித்தே விளையாட்டயர்வோய்' என்றும் முதலியாரின் குணங்களின் சிறப்பை உளங்கனிந்து போற்றி மகிழ்ந்தார்.

முதலியாரின் வள்ளன்மை நிகழ்ச்சிகள் பல. அவைகளில் இரண்டொன்றை மாத்திரம் ஈண்டுக் கூறுவோம்.

ஒருசமயம் பிணியாலும், வறுமையாலும் நலிந்த புலவர் ஒருவர், நமசிவாயரின் இல்லம் சென்றார். அப் புலவரின் தாய்தந்தையர், உடன் பிறந்தார் முதலியோர் ஒருநாளைக்கு இருவேளை கூழ்மட்டுமே அருந்துவர். அக் கூழும் கிடைக்காமையால், அவர் நமசிவாயரின் நல்லகம் புகுந்தார். நம் முதலியார் அப்புலவர் குடும்பத்தினருக்குத் திங்கள் தோறும் கூழுக்குச் செலவாகும் மூன்று வெள்ளிகளைத் தவறாமல் அனுப்பி வந்ததோடு, அப்புலவரை ஒரு வேலை பெறுமளவும் தம் இல்லத்திலேயே உணவு அருந்துமாறும் செய்தார். வேறு ஒரு சமயம், ஒரு புலவரின் இளவல் ஒருவர் போதிய பொருளின்மையால், மனங் கவன்று, தம் தமையனார் உதவியை நாடினார். அவர் தமையனார் அவர்க்குப் பொருளுதவி செய்ய வசதி பெற்றிராமையால், அவர் நமசிவாயரிடம் தன் தம்பியின் குறையைக் கூறினார். நமசிவாயர் உடனே ஆங்கிலத்தில் வரையப் பட்ட "அக்பரின் அரிய நிகழ்ச்சிகள்" என்னும் ஒரு புத்தகத்தை எடுத்துத் தந்து, அதனை மொழிபெயர்ப்பிக்கு மாறு கூறினார். அவரும் அன்றே அப்புத்தகத்தைத் தமிழில் மொழிபெயர்க்கத் தொடங்கினார். சில நாட்களில் அவர் அதை முடித்துத் தம் தமையனாரிடம் கொடுத்தனுப்பினார். நமசிவாயர் அதனை அன்புடன் வாங்கிக் கொண்டு நூறு ரூபாய்கள் கொடுத்தனுப்பினார். அம் மொழி பெயர்ப்பை அவர் பின்னர் பயன்படுத்திக்கொள்ளக்கூட இல்லை. பயன் கருதாமல், இப் பெற்றித்தாய பல நல்லுதவிகள், தக்க சமயத்தில், பல்லோர்க்கும் செய்திருக்கின்றார் நம் புலவர்மணி.

## ௫. கல்வியிற் பேரார்வம்

தமிழ்ப்புலவர் என்னும் பெரும் புகழை அடைந்த நம் முதலியார், ஆங்கில மொழியிலும் புலமைபெற விரும்பினார். அவர் எப்போதும் தமிழ் நூல்களை ஆழ்ந்து வாசிப்பதோடு நில்லாமல், பற்பல உயர்தர ஆங்கில நூல்களையும், ஆங்கிலப் பட்டம்பெற்ற ஒரு நண்பரோடு கலந்து படித்து இன்புறுவார். நமசிவாயர் பல நூல்களைப் படிப்பதோடு நின்று விடுவதில்லை. தம்மைப்போன்ற தமிழ்ப்புலவர்களோடு தமிழ் நூல்களை ஆராய்ச்சி செய்துகொண்டே இருப்பார். ஆங்கிலங் கற்ற நண்பர்களோடும், பல ஆங்கில நூல்களையும், ஊக்கமும், ஆர்வமும் உள்ள ஒரு மாணவன் போல் கேட்டுத் தெரிந்துகொள்வார். தமக்குத் தெரியாத நுணுக்கங்களை, ஏனைய புலவர்களிடம் கேட்டு அறிந்துகொள்ளுவார். பல புலவர்களிடத்திலும் பற்பல பொருள்களைப்பற்றி உரையாடிப் பல அரிய நுட்பங்களை அறிந்து கொள்வதில் விருப்பங்கொள்வார். ஓய்வு கிடைத்த காலத்திலெல்லாம் தமிழ்ப்புலவர் இராமலிங்கத் தம்பிரானிடம் நன்னூலின் நுணுக்கங்களையும், வித்துவான்—இராமசாமி நாயுடு அவர்களிடம் இலக்கிய நுணுக்கங்களையும் கேட்டுத் தெரிந்துகொள்வார். மேற்கூறிய இரு புலவர்களும் செருக்கின்றித் தம்மிடம் வந்து நுண்பொருள்களைக் கேட்கின்ற நமசிவாயரின் குணநலத்தைப் பாராட்டி, அவரிடம் பேரன்பு கொண்டார்கள். சுருக்கிச் சொல்லுமிடத்து, நமசிவாயர் எந்நேரமும் தமிழ் நூல்களையும், ஆங்கில நூல்களையும் படித்தவண்ணமாகவே இருந்து, தமது கல்வியறிவை வளர்த்துவந்தார் எனக் கூறலாம். "கற்றது கைம்மண் ணளவு கல்லாதது உலகளவு" என்று கூறுவர் அறிஞர். வாழ்வில் அதனைக் கடைப்பிடித்தவர் நமசிவாய முதலியார் அவர்களாவர்.

## அ. மேரிராணி கல்லூரி

முதலியாரின் மனமாட்சி எங்ஙனம் உயர்ந்த வண்ண மாக இருந்ததோ, அவ்வாறே அவர்தம் அலுவல் மாட்சி யும் உயர்ந்து திகழ்ந்தது. 1914-ஆம் ஆண்டு, அரசியலார் மேரி இராணியார் கல்லூரியை ஏற்படுத்தினார்கள். அக் காலத்தில் 'பெண்களுக்கும் ஒரு கல்லூரி வேண்டுமோ?' என்று குறுகிய மனப்பான்மையுள்ள பலர் அதை எதிர்த் தனர். சிலர் பெண்கள் கல்வி அத்தகைய உயர்ந்த நிலையை அடைதல் அருமை என்றும், ஆதலால், போதிய மாணவி கள் அக்கல்லூரிக்கு வருவது அதனினும் அருமை என்றும் எதிர்ப்பாராயினர். எனினும், அறிவில் ஆன்ற, பரந்த நோக்கம் பெற்ற அறிஞர்களின் கருத்தை ஏற்று, அரசிய லார் கல்லூரியை நிறுவினார்கள். அக்கல்லூரிக்கு ஏற்ற தமிழாசிரியர் எளிதில் கிடைக்கவில்லை. ஆண்கள் கல்லூரி களில் ஆசிரியர்களாக இருந்த புலவர்கள் புதிதாகத் தொடங்கப்பெறும் பெண்கள் கல்லூரிக்குப் போக மனம் துணியவில்லை. அப்போது பாடசாலைகளின் இன்ஸ்பெக்ட ராக இருந்த இராவ் பகதூர், பிரணதார்த்த ஐயர் நம் முதலியாரின் பழுத்த புலமையையும், பரந்த நோக்கத்தை யும் நன்கு அறிந்தவர். அவர் நமசிவாய முதலியாரே மேற் கூறிய கல்லூரிக்குத் தகுந்த நல்லாசிரியர் என எண்ணி, அப்போது கல்வி இலாகா டைரக்டராக இருந்த, டங்கன் துரை அவர்களிடம் அவரைப்பற்றி அறிவித்தார். ஆனால், டங்கன் நமசிவாயர் அவ்வேலையை ஏற்பாரோ என்று ஐய முற்றார். பிரணதார்த்த ஐயர் நமசிவாயரின் உள்ளத்தின் மாட்சியை எடுத்துக்கூறி, நமசிவாயர் அப் பணியினை ஏற்பார் என்று உறுதியாகக் கூறினார். டங்கன் துரை மகிழ்ந்தார். பின்னர் ஐயர் விரும்பிய வண்ணம், நம் முதலியார் பொருளை மதியாமல், பெருமகிழ்ச்சியோடு

மேற்கூறிய மேரி இராணியார் கல்லூரியில் தமிழாசிரியர் பதவியை ஏற்றுக்கொண்டார். முதலியாரின் நண்பர்களில் பலரும் அதனை விரும்பவில்லை. முதலியாரின் ஆசிரியத் தொழிலின் ஆர்வமும், மாணவர் விரும்பும்வண்ணம் கற்பிக்குந் திறனும் விரைவிலேயே அக் கல்லூரியிலும் புகழடையும் வாய்ப்பை அளித்தன. எல்லோரும் முதலியாரின் அரும்பெருந் திறனைக்கண்டு போற்றினர்.

மேரி இராணியார் கல்லூரியில், நமசிவாயர் தமிழாசிரியர் பதவியை ஏற்று, மாணவிகளுக்குப் பாடம் போதித்த தன்மை தனிச்சிறப்பு வாய்ந்தது. அக் காலத்தில் மாணவர்களுக்கே தமிழ்மொழி கற்பதென்றால் மிகக் கசப்பாக இருந்தது. மாணவிகளுக்கோ தமிழ்ப்பாடம் இன்னும் அதிக கசப்பாகவே இருந்ததென்று சொல்லலாம். ஆனால், நமசிவாயர் மாண்புள்ள தோற்றத்துடன், ஒரு கல்லூரியின் தலைமை ஆசிரியர்போல், அக்கல்லூரியில் தமிழாசிரியராகத் திகழ்ந்த காட்சி, மாணவிகளின் உள்ளங்களில் அவர்பால் மரியாதையையும், அவர் கூறுவதன் கருத்துக்களில் ஆர்வத்தையும் உண்டாக்கியது. நமசிவாயர் இன்முறுவலோடும், கனிவோடும், தமிழ்ப்பாடத்தைக் கற்பிக்கத் தொடங்கினர். அதற்கு முன்னர், அவர்களுக்கு வேம்பாக இருந்த தமிழ்ப்பாடம் கரும்பாக மாறிற்று. கசப்பு இருந்த உள்ளத்தில் இனிப்புத் தோன்றிற்று. மாணவிகள் தமிழில் தனி ஆர்வங்கொண்டனர்.

## ௯. பிற பணிகள் பல

மேற்கூறிய கல்லூரியில் நமசிவாயர் மூன்று ஆண்டுகள் தமிழாசிரியராக இருந்து, பெரும் புகழ்பெற்று வருகையில், 1917-ஆம் ஆண்டில், அரசியலார் அவரைச் சென்னைச் சர்வகலாசாலைத் தமிழ்ப்போட்டியில் தலைமைத் தேர்வாளராக ஏற்படுத்தினர். அப்போது அப் போட்டியின் தலைவராகத் தமிழ்ப்பேரறிஞர், கனகசுந்தரம் பிள்ளையவர்கள் விளங்கினர். அவர்களும், முதலியாரவர்களும் சிறந்த நட்புரிமை கொண்டனர்.

பின்னர் 1918-ஆம் ஆண்டில், நமசிவாயர் தமிழ்க் கல்வி அரசாங்கச் சங்கத்தில் அங்கத்தினரானார். அப்போது அச்சங்கத்தின் தலைவராக உயர்திரு - அனவரத விநாயகம் பிள்ளையவர்கள் இருந்துவந்தனர். அவர் அலுவல் காரணமாக இலங்கைக்குச் செல்ல நேர்ந்தது. அப்போது நம் முதலியாரே அத்தலைமைப் பதவியை ஏற்று, 1920-ஆம் ஆண்டு முதல் 1934-ஆம் ஆண்டு வரையில், அரும்பெரும் பணியாற்றிப் பேரும், புகழும் பெற்றார். அவர் அங்கு ஆற்றிய பணிகள் எல்லாவற்றிலும் தலைசிறந்த பணி, தமிழில் வித்துவான் பரீட்சையை ஏற்படுத்தியதேயாகும்.

## ௧௦. தமிழ் வித்துவான் தேர்வு

சென்னைப் பல்கலைக் கழக வித்துவான் பட்டங்கள் பெரும்பாலும் வடமொழி படித்தவர்களுக்கே வழங்கப்பட்டன. அப்பட்டத்தைப் பெறவேண்டுமானால், தமிழோடு சமஸ்கிருதத்தையாகிலும் அல்லது வேறு பிற மொழிகளில் ஒன்றையாகிலும் கற்கவேண்டும். அது பெரியதோர் இடர்ப்பாடாக இருந்தமையால், பலர் அந்த வித்துவான் பட்டத்தை அடையக் கனவிலும் நினைப்ப

தில்லை. ஆனால், நமசிவாயர் அச்சங்கத்தின் தலைவராக வந்ததும், நெடுங்காலமாகவிருந்த மேற்கூறிய இடர்ப்பாட்டைத் தகர்த்துத் தள்ளினார். தமிழ்மொழி ஒன்றிலேயே பல இலக்கிய நூல்களையும், பல இலக்கண நூல்களையும் கற்றால், வித்துவான் பட்டம் கொடுக்கலாம் எனக் கூறினார். அவர் கருத்தை அரசாங்கமும் ஏற்றுக்கொண்டது. பரந்த நோக்கமுள்ள அறிஞர்களும் ஏற்றுக்கொண்டார்கள். அதன் பின்னரே தமிழ் வித்துவான் தேர்வு தோன்றிற்று; தமிழ் வித்துவான்களும் தோன்றுவாராயினர். இப்போது எங்கும் தமிழ் வித்துவான்கள் நிறைந்திருக்கக் காண்கின்றோம். ஒப்பற்ற இப்பணியை ஆற்றிய நமசிவாயரின் அரும்பெருஞ் செயலினை தமிழுலகம் என்றும் மறவாது.

இராசதானிக் கல்லூரியில்

மேரி இராணியார் கல்லூரியில், தமிழாசிரியராக இருந்த பின்னர், நமசிவாயர் சென்னை இராசதானிக் கலாசாலையில், தமிழாசிரியராக அமர்ந்தார். யாண்டும் சிறந்து விளங்கியதுபோல் முதலியார் அக்கல்லூரியிலும் சிறந்து விளங்கி, மாணவர்களின் பேரன்பையும், பெருமதிப்பையும் பெற்றார். அங்குள்ள ஆசிரியர்களும் அவர் கற்பிக்கும் வன்மையையும், குணநலன்களையும் புகழ்ந்தனர். தலைமை ஆசிரியரும் அவரைப்போன்ற தமிழாசிரியரை எப்போதும் கண்டதில்லை என்று கூறி, அவர் கற்பிக்கும் வன்மையைப் பெரிதும் வியந்து மகிழ்ந்தார். முதலியாரின் பெரும்புகழ், சென்னை நகரில் மாத்திரமன்றித் தமிழ்நாடு முழுவதும் பரந்து ஒளிர்ந்தது.

## கக. நூலாசிரியர்

நமசிவாயர் தமிழ் மாணவர்களுக்கு ஏற்ற தமிழ்ப் புத்தகங்கள் இல்லாத குறையை அறிந்து, பல தகுந்த தமிழ்ப் புத்தகங்களை வரைந்து உதவினார். 1905-ம் ஆண்டு முதல் முதலியார் மாணவர்களுக்குத் தகுந்த தமிழ் நூல்களை எழுதத் தொடங்கினார். அவைகள் புது முறையில், உலகியல் அறிவிற்கும், கல்வியறிவிற்கும் ஏற்றவையாகவும், தனிப்பட்ட புதிய உரைநடையை உடையனவாகவும் மிளிர்ந்தன. முதலியார் பல துறை களிலும் பல பொருள்களைப்பற்றி மாணவர்களுக்கேற்ற தமிழ் நூல்கள் எழுதினார். பெரியவர்களுக்கும் பயன் படக்கூடிய பொருத்தமான நூல்களும் பல எழுதினார்.

1909-ஆம் ஆண்டில், பிருதிவிராசன் நாடகத்தையும், 1910-ஆம் ஆண்டில் கீசகன் நாடகத்தையும் நாடகச் சுவை ததும்ப, மிக அழகாக எழுதி வெளியிட்டார். இவ்விரண்டு நாடகங்களும் பலமுறை பற்பல அரங்கங் களில் நடிக்கப்பட்டன. மேல்நாட்டு நாடகங்களைப்போல், மேற்கூறிய இரண்டு நாடகங்களும் சிறந்து விளங்கு கின்றன என்று பேரறிஞர்கள் புகழ்ந்து கூறினார்கள். இவர் எழுதிய பல புத்தகங்கள் எஸ். எஸ். எல். சி. இண்டர் மீடியட், பி. ஏ. வகுப்புக்களுக்குப் பன்முறை பாடமாக வைக்கப்பட்டிருக்கின்றன.

நமசிவாயர் தேசிங்குராசன், சனகன் என்று இரு நூல்கள் பொருட்சுவையும், வீரச் சுவையும் சிறந்து பொலிய, மிகவும் திறம்பட எழுதியிருக்கின்றார். அக் காலத்தில் சென்னைக் கவர்னராக இருந்த ஸர். ஆர்தர் லாலி என்பவரும் அவ்விரண்டு நூல்களையும் மிகவும் பாராட்டி யிருக்கிறார்.

நமசிவாயர் காலத்தில் தமிழ்ப் பத்திரிகைகள் மிகவும் குறைவு. பொதுமக்கள் பத்திரிகைகள் இல்லாக் குறையால், தமிழறிவு பெறும் பேற்றைப் பெறவில்லை. அவ்வமயத்தில் ஆசிரியர்களுக்கென்று ஒரு பத்திரிகையும் இல்லை. நமசிவாயர் ஆசிரியர்கள் தமிழ்ச் சுவையை நன்கு ஆய்ந்து, மாணவர்களுக்குத் தமிழில் நல்லறிவு புகட்டவேண்டும் என்று பேரவாக்கொண்டிருந்தார். ஆதலால், அவர் தாமே ஒரு அருமையான, பல பொருள்கள் பொலிந்த, மாதப் பத்திரிகை ஒன்றைத் துவங்கினார். அதற்கு 'நல்லாசிரியன்' என்று பெயர் சூட்டினார். அப் பத்திரிகையில் பல அறிஞர்கள் ஆசிரியர்களுக்கும், மாணவர்களுக்கும் ஏற்ற பொருள்களை எழுதி வந்தனர். நமசிவாயர் அப்பத்திரிகையில் எழுதிய அறிவு செறிந்த பொருள்கள் பொன்னேபோல் போற்றத்தக்கவை. அப் பத்திரிகையால் தொடக்கப்பள்ளி ஆசிரியர்கள் அடைந்த நன்மைகள் பற்பலவாகும். 15-ஆண்டு காலம் முதலியார் நல்லாசிரியனை நடத்திப் பொதுவாகத் தமிழ் மக்களுக்கும், முக்கியமாக ஆரம்ப ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் அருந்தொண்டு ஆற்றினார். இத்தன்மைத்தான ஒரு மாதப் பத்திரிகையை முதன்முதலாகத் துவங்கி, மற்ற மக்களுக்கு வழிகாட்டியவர் நமசிவாயரே.

## பதிப்பாசிரியர்

நமசிவாயர் தமிழ்நூல்கள் உயர்தர ஏடுகளில், அழகான அட்டைகளோடு, கண்களைக் கவரத்தக்கதாய், ஆங்கில நாட்டார் வெளியிடும் நூல்கள்போல் தமிழிலும் இருத்தல்வேண்டும் என்று விரும்பினார். தமிழ் நூல்கள் நல்ல ஏடுகளில், அழகான அட்டைகளுடன் வெளியிட விரும்பினவர்களில் நம் முதலியாரும் ஒருவர். முதலியார்

தம் சொந்தச் செலவில் ஆத்திசூடி முதல் பலசிறிய நூல்களை எல்லா மக்களுக்கும் பயன்படுமாறு பதிப்பித்தார். புலவர்களுக்காகவும் தொல்காப்பியத்தில் சொல்லுக்கும், பொருளுக்கும் இளம்பூரணர் உரையையும் தணிகைப் புராணம், தஞ்சைவாணன் கோவை இறையனார் களவியல் முதலிய நூல்களையும் அழகிய முறையில் பதிப்பித்திருக்கிறார்.

## கஉ. நவிப்பட்ட பண்புகள்

நமசிவாயர் பல நண்பர்களுக்கும், புலவர்களுக்கும், அவ்வப்போது பற்பல நன்மைகள் செய்தபோதிலும், இன்னும் அதிக நன்மை செய்யவில்லை என்று மறைவில் அவர்மீதும் குறைகூறுவோர் பலர் உண்டு. நன்றி மறப்பது இவ்வுலகில் மக்களுக்கு இயல்பு என்பதை நன்கு அறிந்த நமசிவாயர் அத்தகைய மக்களையும், மனத்தில் சற்றும் அருவருப்புக்கொள்ளாமல், அன்புடனே பாராட்டி வருவார். அவர்கள் குற்றத்தை நன்கு உணர்ந்திருந்தும், வேற்றுமை காட்டாமல், ஒரேவித அன்பு அவர்களுக்குக் காட்டும் பெருந்தன்மை நம் முதலியார்க்கு அமைந்தது போல் மற்றெவர்க்கும் அமைவது அரிதினும் அரிதே.

நம் முதலியார் தீமை செய்தவர்களுக்கும் நன்மை செய்யும் பெருங்குணம் வாய்ந்தவர்; குணம் கண்ட இடத்தில் மகிழும் பெருந்தகை; தீயன செய்தாரையும் நல்லன செய்து வாழ்விக்கும் வள்ளல்; தன் குறையைத் தீர்க்காமல் பிறர் குறையைத் தீர்க்கும் செம்மல்.

> " இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
> என்ன பயத்ததோ சால்பு."

என்னும் பொய்யாமொழியின் திருவாக்கின்படி, நமசி

வாயர் நமக்குத் தீமை புரிந்தவர்க்கும் நன்மை புரிந்து வந்தார். இது அருமையான, எல்லோரும் போற்றத்தக்க பெருங்குணம் என்று சொல்லலாம். அக்குணத்தைக் காட்டப் பற்பல நிகழ்ச்சிகள் கூறலாம். அவற்றில் ஒன்றை மாத்திரம் ஈண்டுக் குறிப்பிடுவோம்.

ஒரு பாடசாலையில் ஆசிரியராக இருந்த ஒருவர் நமசிவாய முதலியார் எழுதிய கணக்குப் புத்தகங்களை அப்பாடசாலையில் வைத்தல் கூடாது என்று தலைமை ஆசிரியரிடம் சொல்லிவிட்டார். அவைகளில் சில குறை கள் இருந்ததாகவும் தலைமையாசிரியரிடம் கூறினார். ஆகை யால், அப்புத்தகங்கள் அப்பாடசாலையில் வைக்கப்பட வில்லை. முதலியாரவர்களுக்கும் இச்செய்தி தெரிந்தது.

பின்னர் சிறிதுகாலம் சென்றதும், மேற்கூறிய ஆசிரியர் சென்னையில் ஒரு பெரிய செயலை முடிக்க வேண்டியவரானார். அதற்கு நமசிவாய முதலியாரின் உதவிதான் அவசியமாக இருந்தது. முன்பு அவர் முதலி யாருக்குத் தீமை விளைவித்ததால், முதலியாரை அணுக அஞ்சினார். இருப்பினும், அவருக்கு வேறு தக்க வழி ஒன்றும் இல்லாமையால், ஒரு நண்பரைத் துணைக் கொண்டு, முதலியாரிடம் சென்று, தம் குறையைத் தெரி வித்தார். முதலியார் அவரை அன்புடன் வரவேற்று, முகமன் கூறி, அவர் வேண்டிய உதவியை மனம் உவந்து செய்ய முன் வந்தார். அதுவுமன்றி, அவருக்கு இன் சுவைப் பண்டங்களும் தருவித்து விருந்தூட்டினார். அப் போது அவ்வாசிரியரின் உள்ளம் வெள்கிற்று. அவருக்குப் புரிந்த தீமையை வெளிப்படையாக எடுத்துரைத்து, மனம் வருந்தினார். ஆனால், நம் முதலியார் நாம் முன்னமே அதை அறிவேன் என்று கூறி, அதற்காக அவர் மனம்

வருந்தவேண்டியதில்லை என்றும், தம் மனத்தில் தோன்றியதை அஞ்சாமல் வெளிப்படுத்தியதால், அவர்மீது தவறு இல்லை என்றும், ஆனால், அக்குறையைத் தமக்கே நேராகத் தெரிவித்திருந்தால் சாலவும் நன்மையாக இருந்திருக்கும் என்றும் புன்முறுவலுடன் கூறினார். அவ்வாசிரியர் முன்னினும் அதிக நாணமடைந்தார்; தமது குற்றத்தையும் உணர்ந்தார். பின்னர் நமசிவாயர் அவர் விரும்பிய செயலைச்செய்து முடித்து, அவருக்குப் பேருதவி புரிந்தார். இந்நிகழ்ச்சியை அவ்வாசிரியரே பின்னொருகால் வெளிப்படையாகக் கூறியுள்ளார்.

முதலியார் அழகாக உரைநடை நூல்கள் எழுதுவதில் சிறந்து விளங்கியதுபோல், பாடல்களும் அழகாக இயற்றும் சிறப்பு வாய்ந்தவர். “குணவான் தன் குற்றமுணர்வான்” என்னும் தலைப்பின்கீழ், அவர் பாடிய பாடல்கள் படிக்கப் படிக்கப் பெருமகிழ்ச்சி அளிக்கும். அவர் வேடிக்கையாகப் பாடும் திறமை வாய்ந்தவர். “கயவன் தன் கல்வி அருமை அறிந்தது” என்னும் தலைப்பின்கீழ், அவர் பாடிய பாடல்களில் நகைச்சுவை ததும்புகின்றது. அவர் எழுதியுள்ள, “டிரமடிக் இண்டர்லூட்” என்னும் சிறு நாடகங்கள் சிறுவர்களும், சிறுமிகளும் நடிப்பதற்குத் தகுதியுடையனவாய் இருக்கின்றன.

நமசிவாயர் தம் இல்லத்தில் தமிழ் ஆராய்ச்சியையே தம் இன்பப் போக்காகக் கருதி, மற்றப் புலவர்களோடு சேர்ந்து இன்புறுவார். ஒருநாள் இலக்கண ஆராய்ச்சி பற்றியும், மற்றொருநாள் இலக்கிய நயம்பற்றியும், வேறொருநாள் சரித்திர ஆராய்ச்சிபற்றியும், இன்னொருநாள் கவித்துவம் பற்றியும் உரைகள் நிகழ்த்துவார். அவைகள் கேட்போர்க்குப் பேருவகை அளிக்கும். ஒருநாள் மழவைச் சிங்கார சதகத்துள் வழக்கிலுள்ள சிறு சொற்களையே

சேர்ந்து இருப்பது எவ்வளவு இன்பமாக இருக்கிறது என்று தம் வீட்டில் வழக்கமாகக் கூடும் புலவர் கூட்டத்துள் முதலியார் கூறினார். அதாவது,

"என்னைத்தான் கவன்பேச்சை யெடுக்கின்றாய்
கேவொருருபேச் சிருந்தாற் சொல்லு."

என்னும் பாடலை முதலியார் பாடிக்காட்டி, நகையூத்தனர். அப் பாடலை அவர் நாற்பது வருடங்களுக்குமுன் படித்த தாகக் கூறினார்.

சொற்பொழிவுத் திறன்

நம் முதலியார் சொற்பொழிவில் சிறந்த அறிவு செறிந்திருக்கும். பொருத்தமும் பொருந்தி இருக்கும்; பொருளும் அமைந்திருக்கும்; நடையும், ஓசையும் இன் புட்டும்; சொற்பொழிவில் புன்முறுவலும் மிளிர்ந்திருக் கும்; நீண்டதோர் விரிவுரை செய்வதே இல்லை. எடுத்த பொருளைப் பொருத்தமாகவும், சுருக்கமாகவும், இனிமை யாகவும் சொல்லி முடிப்பார். பேசும்போது இலக்கண வழுக்கள் காணப்படா. அவர் சொற்பொழிவை ஒருவர் அப்படியே எழுதிப் பின்னர் வாசித்துப் பார்ப்பாரானல், அது அழகு நிறைந்த, ஒரு பிழையுமில்லாத, பொருள் பொதிந்த, ஒரு உயர்ந்த கட்டுரையாகவே காணப்படும். எடுத்துக்கொண்ட பொருளைக் குறிப்பிட்ட நேரத்தில், சொற்சுவை, பொருட்சுவை பொலிய, நகைச்சுவையும் ததும்பப் பேசிமுடிக்கும் பேராற்றல் பெற்றவர். இத் தகைய சொற்பொழிவுகள்தான் நம் தமிழ் நாட்டிற்கு அவசியமென்று சொல்லவும் வேண்டுமோ?

## ௧௩. குறிஞ்சிவீடும் கடலகமும்

நமசிவாயர் கல்விச் செல்வத்தில் திகழ்ந்ததுபோல், பொருட் செல்வத்திலும் திகழ்ந்திருந்தமையால், கோடைக் கால விடுமுறை நாட்களில், ஆங்கிலேயர்கள்போல் நீலகிரிக்குச் செல்வது வழக்கம். அங்குக் கோடைக்காலத்தில் அம் மலையிலுள்ள குளிர்நிழலின் இன்பத்தை நுகர்ந்து, வசந்தகாலத்தை, மிகுந்த மகிழ்ச்சியுடன் கழிப்பார். அம்மலையில் அவர் ஓர் அழகிய மாளிகையும் அமைத்துக்கொண்டார். அம் மாளிகைக்குக் "குறிஞ்சி வீடு" என்னும் தமிழ்ப் பெயரையே அளித்தார். முதலியாருக்குக் குறிஞ்சி நிலத்தின்மீதும், அந் நிலத்திற்கு உரிய கடவுளாகிய "முருகவேள்" மீதும், பேரன்புண்டு. மலைவள நலத்தைக் காண்பதில் நமசிவாயருக்கு விருப்பம் அதிகம். ஆகையால், அவர் நீலகிரிக்குச் செல்லும்போதெல்லாம், பல புலவர்களைத் தம்முடன் அழைத்துச் சென்று, அவர்களைத் தம் மாளிகையிலேயே விருந்தூட்டி, அவர்களோடு அளவளாவிப் பெருமகிழ்ச்சி அடைவார். அதனினும் சிறந்த இன்பம் வேறு ஒன்றுமில்லை என்று அவர் எண்ணியிருந்தார்.

நமசிவாயர் ஆராய்ச்சித் துறையில் பெரிதும் முன்னணியில் நிற்பவர். ஆண்டுதோறும், நீலகிரிக்குச் செல்லுங்காலத்தே அம்மலையைக் குறித்தும், ஆங்குள்ள மரஞ்செடி கொடிகளைக் குறித்தும், ஆண்டு வாழ்கின்ற மக்களைக் குறித்தும், நுணுகி ஆராய்ந்தார். பல்கலைக் கழகச் சார்பில் நம் முதலியார் மேற்கூறியவைகளைப்பற்றி ஓர் அரிய விரிவுரையும் நிகழ்த்தியுள்ளார். அதனைக் கேட்ட அறிஞர்கள், அவர் அறிவின் பேராற்றலைப் பெரிதும் புகழ்ந்தனர்.

வஞ்சி, கரந்தை, கொச்சி, தும்பை முதலிய துறைகளின் மலர்கள் இன்னின்னவாமெனப் புலவர்கள் நேரில் கண்டு களிக்க, அச்செடி கொடி முதலியவற்றை முதலியார் தம் மாளிகையைச் சுற்றியிருந்த பூங்காவில் வைத்து வளர்த்தார்.

கடலகம்

நமசிவாயருக்குப் பொருட்செல்வம் வளர்ந்து வந்தமையால், அவர் திருமயிலையில், கடற்கரையோரத்தில், ஓர் அழகான மாளிகையை அமைத்துக்கொண்டார். அதற்குக் 'கடலகம்' என்னும் தமிழ்ப்பேர் சூட்டினார். அம் மாளிகையில் தங்கி, பரந்து விரிந்த கடலின் இன்பக் காட்சியையும், குளிர்ந்த மெல்லிய பூங்காற்றின் இன்பத்தையும் நுகர்ந்து, முதலியார் பெருவகை பூத்தார். அம் மாளிகையில் அவர் ஓர் உயர்ந்த மேல்நாட்டுத் துரைமகன்போல் மேதகு வாழ்க்கை நடத்திவந்தார். அவருக்குப் பளபளப்பான, கண்களைக் கவரும் வனப்பு வாய்ந்த, மோட்டார்க் காரும் உண்டு. அவரைப்போல் உயர்ந்த இல்லறவாழ்வை அடைந்து, நல்லின்பம் துய்த்தவர் வேறு எத் தமிழ்ப் புலவரும் இல்லையெனக் கூறலாம். தமிழ்நாட்டின்கண் செம்மை நிறைந்த, புலமை பழுத்த, வள்ளன்மை கனிந்த, செழுந்திரு கெழுமிய தமிழ்ப்புலவர் இவரே. அழுக்காறு இல்லாத் தனித்தூய்மை திகழப்பெற்ற பெருந்தகையும், தமிழர் நலத்தைத் தம் நலமாகக் கருதும் புலவர்மணியும் இவரே. தமிழ் மாணவர்கள் உளமெலாம் உறையும் குணமணியும் இவரே. பிரபுக்கள், அதிகாரிகள், அமைச்சர்கள் முதலியோர் நட்பையும், நன்மதிப்பையும் பெற்ற தமிழ் அரசும் இவரே. தாம் புகுந்த துறைகளிலெல்லாம் தனி வெற்றியும், தனிமாட்சியும் பெற்று விளங்கியவரும், தமிழாசிரியரும் இவர் ஒருவரே என்னலாம்.

## ௬௯. பண்டிதர் சங்கமும், தமிழ்த் திருநாளும்

நமசிவாயர், பண்டிதர்கள் நிலைமையைப் பலவழிகளி லும் உயர்த்தவேண்டுமென்னும் விழுமிய நோக்கத்தால், 'சென்னைப் பண்டித சங்கம்' என்று ஒரு சங்கத்தை நிறுவி னர். பண்டிதர்கள் சீரும் சிறப்பும்பெற்று வாழ்வதற்கு வேண்டுவன புரியுமாறு, அரசியல் அதிகாரிகளுக்கு அவ் வப்போது அறிவுறுத்திப், பற்பல நலங்கள் பண்டிதர் களுக்குப் புரிந்துவந்தார். அவர்தம் நன்முயற்சியால், பண்டிதஉலகம் சீரும் சிறப்பும் பெற்றுத் திகழ்வதாயிற்று. பண்டிதர்கள் வாழ்க்கைத் தரத்தையும், தாம் செய்த பற்பல முயற்சிகளால் உயர்த்திப் பண்டிதர்கள் உள்ளங்களில் தனியிடம் பெற்றுத் திகழ்ந்தார். இப்பெரியார்க்குப் பொதுவாகத் தமிழ் மக்களும், சிறப்பாகப் பண்டிதர்களும் என்றென்றும் நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக் கிறார்கள்.

### தமிழ்த் திருநாள்

தமிழர்கள் ஒன்றுகூடிப் பல அரிய பொருள்களைப் பேசி, அளவளாவத் 'தமிழ்த் திருநாள்' திருவிழா முதன் முதலாக இவர்தான் நடத்தினர். தமிழ்மக்களின் பண்டைய நூல்களின் சிறப்பையும், வாழ்க்கையின் சிறப்பையும், பெருந்தன்மையின் சிறப்பையும் நினைவூட்டி, தமிழர்கள் அனைவரையும் உரமாக உறவுகொள்ளும்படி இத்தமிழ்த் திருநாள் விழாவை ஆண்டுதோறும் நமசிவாயர் இனிது நிறைவேற்றித், தமிழர்களுக்குத் தொண்டு புரிந்தார். இப் போது தமிழர்கள் தமிழ்த் திருநாள் கொண்டாடும் வழக் கத்தைப் பின்பற்றி, அவ்விழாவைக் கொண்டாடுகிறார்கள். இவ்விழாவைத் தோற்றுவித்தவர் நம் நமசிவாயரேயாவர்.

கடவுள் பத்தி

நமசிவாயருக்கு அழுந்திய பத்தி ஆண்டவனிடத்தில் உண்டு. மக்கள் புரியும் முயற்சிகள் எல்லாவற்றிற்கும் முழுமுதற் செழும்பொருளின் கருணை அவசியமே என்பர். அவர் இறைவனை என்றும் மறந்ததேயில்லை. முதலியாரின் வழிபடு கடவுள் முருகவேள். அவர் அப்பெருமான்மீது 'தணிகைத் தவப்பயன் மாலை' என்ற பெயரால், சில பாடல்களை உருக்கமாகப் பாடியிருக்கிறார்.

## கரு. நமசிவாயர் மறைவு

தமிழ்நாடு செய்த தவத்தாலே தோன்றிய நமசிவாய முதலியார், காவேரிப்பாக்கத்தில் பிறந்து, சென்னையில் குடிபுகுந்து, தமிழாசிரியர் பதவியை அடைந்து, தமிழ் மாணவர்களைச் சீர்படுத்திக், தமிழ் வித்துவான்களைத் தோற்றுவித்துத் தமிழர் நிலையையே உயர்த்திப், பேரும், புகழும் தமிழ்நாடெல்லாம் பெற்றுத் திகழ்கையில், 1937-ஆம் ஆண்டில், நீங்காப்பிணி ஒன்று வரப்பெற்றார். பற்பல மருத்துவர்கள் வந்து, மருத்துவஞ் செய்தும் பயன் படவில்லை. அவர் நோயுற்றிருந்த காலத்தில், பண்டிதர்களும், மாணவர்களும், பிரபுக்களும், பெரியோர்களும் அவரை வந்து பார்த்துக்கொண்டே இருந்தனர். முதலியார் அக்காலத்திலும் மனவலியை இழக்கவில்லை. இறந்து விடுவோம் என்று அறிந்துகொண்டும், அவர் மனம் வருந்தவே இல்லை. இறப்பு என்பது உலகில் மக்கட்கு இயல்பே என்று எண்ணி, ஈசன் இணை அடிகளில் மாத்திரம் இறவாத இன்ப அன்புவைத்தார். இறுதியில், நமசிவாயர் தமிழன்னை அலறவும், தமிழ் மக்கள் மனம் உடைந்து கதறவும், மாணவர்கள் கண்ணீர்விட்டுப் புலம்ப

வும், கன்மனத்தோரும் கசிந்துருகவும், இம் மண்ணுலக வாழ்வை நீத்தார். ஆயிரக்கணக்கான ஆண்மக்களும், பெண்மக்களும், பண்டிதர்களும், மாணவர்களும் அவர் பொன்னுடலைக் கடைசி முறையாகக்கண்டு, நன்காடு வரையில் சென்று, அவர் புகழைப் பேசிப்பேசிப் புலம்பிப் புலம்பி, அவருக்கு வணக்கம் புரிந்து, உள்ளம் உடைந்து வருந்தினர்.

நமசிவாயர்தம் துணைவியார் மயிலாப்பூரின் கடலருகேயுள்ள கடலகத்தில் தம் அரும் புதல்வர்களுடனும், புதல்விகளுடனும் இன்புடன் வாழ்ந்து வருகின்றனர். தவப்புதல்விகள் திருமணம் பெற்றுத் தங்கள் கணவரோடு இல்லறம் இனிது நிகழ்த்துகின்றனர். அருந்தவப் புதல்வர்கள் பெருநலம் பெற்று, அன்பும், இன்பும் தவழும் நல்லற வாழ்க்கையில் தழைகின்றனர். முதலியாரின் இளவல், திரு. மாணிக்க முதலியார் என்பவர் பெருஞ் செல்வத்துடனும், சிறப்புடனும், உயர்ந்த பதவியில் அமர்ந்து, கோவிந்தப்ப நாய்க்கன் வீதியிலுள்ள நமசிவாயர் முன்னிருந்த காவேரியகத்திலேயே இனிது வாழ்ந்து வருகின்றனர்.

" நமசிவாயர் பெரும்புகழ் வாழ்க! "

நற்றமிழி னுலகமெல்லா நாச்சிறக்க
வுளமினிக்க நலமே பூண்ட
சொற்றமிழின் தனித்தெய்வம் நிதிசொரியுந்
தனிவள்ளல் சொல்லில் வல்ல
கற்றவர்தந் தனிக்களிப்பு என்றென்றே
நவின்றிடவே களித்தே வாழ்ந்த
நற்றுறையின் நாயகமே நின்பெருமை
எம்மவரால் நவிலற் பாற்றோ ?

மணி. திருஞானசம்பந்த முதலியார்.

# இரங்கற்பாக்கள்

நமச்சி வாய ! நமச்சி வாய !
பட்டனை என்று விட்ட செய்தி
உறுத்தது மின்னென ; இறுத்தது வெருக்கோள் ;
பொறிபுலன் கலங்கி நெறியுணர் வழித்தன ;
மண்ணுஞ் சுழன்றது ; விண்ணுஞ் சுழன்றது ;
எங்கும் இருளே தங்கிய தன்றே !
தெளிவுறு நிலையில் களிமொழி யுடுத்த
அளிதமி ழருவி இழிதரு மலையாய்
விளங்கிய காட்சி வழங்க வில்லை.
என்னே உலகம் ! என்னே உலகம் !
"இருந்தார் நெருநல் இறந்தார் இன்றே"
என்னும் உண்மையில் மன்னிய நெஞ்சையும்
நின்றன் பிரிவு நின்றே உருக்கும்.........
நமச்சிவாய ! நமச்சிவாய !.........
அருந்தினை தமிழைப் பொருந்திய அமிழ்தென
அம்மொழி பயின்றோர் செம்மை யுறவே
சேர்த்தனை செல்வம் கூர்த்த மதியால்
கற்றவர்க் கென்றும் உற்றுழி உதவ
மற்றவர்க் குழைத்தல் நற்றவ மென்னும்
விழுமிய கொள்கையைத் தழுவி நின்றனை
இடனில் பொழுதுங் கடனறி காட்சியில்
ஒல்கா திருந்தனை பல்கால் எவரும்
அச்சமின்றி நச்சின ரிலமே
என்று மின்மொழி நன்றே வழங்கினை
சாதியை யொழித்து நீதியில் நடந்தனை
முருகனடியிணை கருதி வாழ்ந்தனை
மூன்று பள்ளியில் ஆன்ற சேவையில்
கனியெனப் பிள்ளைகட் கினிமை யாயினை
செந்தமிழ்த் தாயின் சிந்தை மகிழக்
கால ஒப்பனை சாலச் செய்தனை
விருந்துகண் டஞ்சாத் திருந்திய மனையும்

மக்களும் நட்பும் ஒக்கலும் பெற்றனை
கன்னித் தமிழருள் மன்னவன் நீயெனப்
பெற்றனை எல்லாம் பெற்றனை ஐயா!
.................................................................
.................................................................
நின்மொழி யுன்ன நின்செயல் எண்ண
உள்ளங் குழையும் ஊனுங் கரையும்
என்பு நெக்குறும் அன்புக் கடலே
பெரிதே துன்பம் பெரிதே
காண்ப தென்றோ மாண்புறு முகமே! 2

திரு. வி. கலியாணசுந்தரனர்.

வந்தவரை முகமலர்ந்து வரவேற்கு மன்புரையும் வந்தோர் கூறும்
அந்தவுரை செவிமடுத்தலோ தாமென்னு மின்மொழியும் ஆவசெய்ய
முந்துளமும் முடியாத முடிக்கிற்கும் விரகுமொழித்திறனும் முன்னாள்
தந்தனம்என் றோதீயுந் தகைமையுமோர் சார்பின்றித் தளர்வாலோ!

தம்புகழைப் பிறர்கூற நாணுவர் அவ்வுரைகேட்டுத் தலைசாய் கிற்பர்
அம்புவியிற் சான்றோர்என் றறையுமுறை யாமறிவோம் ஐயநின்போல்
நம்புமுயிர் துறந்தோரை நாடறியா தறியுமெனின் நமச்சி வாய
எம்பெரும நின்முன்னின் புகழுரைக்க நின்னன்பர் எண்ணார் ஐய!

வே. வேங்கடராயலு ரெட்டியார்

நன்மைதரு நமச்சிவா யப்பெயர்கொ
ணவலனே நானிலத்தோர்
வன்மைபெறு மாறுபல வசனநூல்
வகுத்தெழுதி மாண்புற் றேறே
இன்னயமாய் மொழிகூறி யாவர்க்கு
மிதம்விளைக்கு மியல்பு வாய்ந்த
தன்மையனே உன்பிரிவு தமிழர்க்கெல்
லாந்துன்பந் தந்த தையா!" 1

கோ. வடிவேல் செட்டியார்.



பேராசிரியர்

மணி-திருநாவுக்கரசு முதலியார்

தமிழ்ப் பேராசிரியர்

# 3. மணி. திருநாவுக்கரசு முதலியார்

---

## க. இளமைப் பருவம்

செந்தமிழ் நாட்டிலே, அண்மையில் இருந்த அருந் தமிழ்ப் புலவர்கள் பல்லோர் குழுவில் ஒளிபெற விளங்கியவர், மணி. திருநாவுக்கரசு. செங்கல்பட்டு ஜில்லாவைச் சேர்ந்த, மணிமங்கலம் என்னும் ஊரில் 1888-ஆம் ஆண்டில் அவர் தோன்றினர். அவ்வூர் இயற்கை அழகிற் சிறந்தது. அதன் மேற்கில் ஒரு குன்றும், குன்றின்கீழ் ஒரு பெரிய ஏரியும், ஏரியின்கீழ் ஒரு பெரிய தடாகமும், தடாகத்தின் மருங்கில் இரு திருக்கோயில்களும் அமையப்பெற்றது. அக் காட்சி கண்டோர் உள்ளத்தைக் கவரச் செய்யும். அத்தகைய அழகிய ஊரின்கண் தூய உள்ளமும், பரந்த நோக்கமும், கருணைப் பொலிவும் அணியுறப் பெற்றவர் சுந்தர முதலியார். அவர் சைவ வேளாண் குடியில் தோன்றியவர்.

வேளாளர் வள்ளன்மை பூண்டவர்கள் என்று பண்டைக் காலத்துத் தமிழ்ப் புலவர்கள் சிறப்பாகப் பாடியதற்கு ஏற்ப, அவர் வள்ளன்மையையே அணிகலனகப் பூண்டவர்; கள்ளமில்லா உள்ளத்தையும் கனிவுறப் பெற்றவர். அவர் ஆற்றிய பெரும் புண்ணியத்தின் பயனகச் சொற்றிறம்பாத, கணவனைக் கடவுள் என்று உள்ளபடியே கருதிய பெருமை வாய்ந்த, பொறையும், பணிவும், கனிவும், நயமும் பெற்ற வேதவல்லி என்னும் கற்பரசியை

மனையரசியாகப் பெற்றார். அவ்விரு பெருங்குணக் கொழுந்துகளின் தவப்பயனாகத் தோன்றினார் திருநாவுக்கரசு.

சுந்தர முதலியார் நான்கு புதல்விகளைப் பெற்றும், ஆண்மகவு இன்மையால், மனம் பெரிதும் நொந்தார். அவர் பெருங் குறையை நீக்க, நாவுக்கரசு என்னும் புலவர் மணியை அவர்க்கு ஆண்டவன் அருள்செய்தான். தந்தையார் அச்சமயம் திண்ணிய தேகம் பெற்ற, அருட்பொலிவும் ஒளிப்பெருக்கும் மிகுந்த ஆண்மகவைக் கண்டு பேருவகை பூத்தார். ஒரு சைவப் பிரசங்கத்தில், சைவ சமயாசாரியர்களில் ஒருவராகிய திருநாவுக்கரசர் தம் ஒப்பிலாப் பெருமையைக் கேட்டு உள்ளம் கசிந்து அவர்பால் பேரன்புகொண்ட அவர், தம் புதல்வனுக்கும் "திருநாவுக்கரசு" என்னும் பெயரையே புனைந்து மகிழ்ந்தார்.

திருநாவுக்கரசுக்குப்பின் ஒரு ஆண்மகவையும், ஒரு பெண் மகவையும், இறுதியில் மீண்டும் ஒரு ஆண் மகவையும் சுந்தர முதலியார் பெற்றார். எனவே, நாவுக்கரசுக்கு ஒரு சகோதரியும், இரு சகோதரர்களும் பின்னர் வாய்த்தனர். சகோதரர் இருவரும் அவரிடத்தில் இலக்குவன், பரதனைப்போல் அளவுகடந்த அன்புடையவர்களாய் இருந்தார்கள். அவர்கள் திருஞானசம்பந்தன், கோட்டீஸ்வரன் என்பவர்கள்.

தம் ஊரில் தம் தந்தையார் வைத்திருந்த தெருப் பாடசாலையிலேயே திருநாவுக்கரசு தமிழ் கற்றார். அச் சிறு வயதிலேயே சுந்தர முதலியார் அவருக்குக் குமரேசர் சதகம், விவேக சிந்தாமணி, திருப்புகழ் முதலிய தமிழ் நூல்களைக் கற்பித்தார். அப்போதே திருநாவுக்கரசுக்குத் தமிழ்ச் சுவை தெரியவந்தது. பின்னர் அவ்வூரில் இருந்த

ஒரு மிஷின் பாடசாலையில் கல்வி கற்று, அவர் பிரைமரி பரீட்சையில் முதல் வகுப்பில் தேறினார். பின்னர் செங்கல்பட்டிற்குச் சென்று, அங்கிருந்த நேடிவ் உயர்தரப் பாடசாலையில் எட்டாவது வகுப்பு வரையில் ஆங்கிலமும், தமிழும் வளமுறக் கற்று, அறிவு சான்ற மாணவன் என்னும் பெயர் பூண்டார். எழாவது வகுப்பில் துரைத்தனப் பரீட்சையில் முதல் வகுப்பில் தேர்ச்சியுற்றார்.

எழாவது வகுப்பிலேயே நாவுக்கரசு தமிழ்ப் பண்டிதன் என்னும் பெயரைத் தமிழாசிரியர்கள் இடத்தும், மாணவர்களிடத்தும் பெற்றுவிட்டார். பின்னர் அவர் சென்னைமாநகரம் சேர்ந்து, தொண்டைமண்டல உயர்தரப் பாடசாலையில் பத்தாவது வகுப்பு வரையில் வாசித்தார். அப் பாடசாலையில் அதுபோழ்து தலைமைத் தமிழாசிரியராக விளங்கிய சிவப்பிரகாச ஐயர் என்னும் பெரும் புலவரிடம் 'தமிழ்ப் புலவன்' என்னும் பட்டத்தைப் பெற்றுவிட்டார். நாவுக்கரசு எப்போதும் தமிழையே கற்க அவாக் கொண்டு விட்டமையால், தமிழ் நூல்களை வாசிப்பதிலேயே தமது சிந்தையை முற்றிலும் செலுத்தி விட்டார். அக் காரணத்தால் அவர் பத்தாவது வகுப்பு வரையில்தான் ஆங்கிலம் கற்றார். ஆனல், ஆங்கில அறிவு பின்னர் வளம்பெறத் தனிப்பட்ட முறையில் தாமே கற்கத் துவங்கினார். ஆங்கில அறிவும் உயரிய நிலையில் பிற்காலத்தில் அவர் பெறலானார். இருப்பினும், தமிழறிவு தான் அவர் உள்ளத்தில் தனியரசு நடாத்தியது.

## உ. திருமணமும் குடும்பத் தொல்லையும்

திருநாவுக்கரசின் திருமணம் எதிர்பாராவண்ணம் நிகழ்ந்தது. மணமகள் மாண்புள்ள குணம்வாய்ந்த, அழகுவாய்ந்த, வஞ்சிக்கொடியேபோல் இலங்கினாள். அவள் தந்தையார் சென்னை நேஷனல் பாங்கியில் தலைமைக் கணக்காயர் பதவியில் ஒளிர்ந்தார். ஆனால், அவர் வருவாய்க்குமேல் செலவு செய்து வந்தமையால், தம் புதல்விக்கு மணப்பரிசுகள் பிள்ளை வீட்டார் விரும்பியவண்ணம் அளிக்கவில்லை. அக்காரணத்தால் நாவுக்கரசின் அன்னையாரும், ஏனைய நெருங்கிய உறவினரும் மனம் புழுங்கினார்கள். சுந்தர முதலியாரும், திருநாவுக்கரசும் மாத்திரம் அப் பரிசுகளைப் பொருளாக மதிக்கவில்லை. உண்மைப் பொருள் உயர் குணமுள்ள பாவையே என்று கருதிப் பிற மக்களிடத்தில் திருமணம் காரணமாகப் பொருளைக் கவர்தல் பெருந் தவறே என்ற கொள்கையைத் திருநாவுக்கரசு அஞ்ஞான்றே கொண்டிருந்தார். அழிதல் நீர்மைத்தாகிய பொருளை மதியாது, அன்பின் கொழுந்தாகிய, அருமை மனைவியையே அரும்பெரும் பொருளாக அவர் கருதினார்.

திருநாவுக்கரசின் குடும்பத்தில் அதுபோழ்து வறுமைப்பிணி தலைகாட்டத் துவங்கியது. அவர் அன்னையார் வேதவல்லி அம்மையார் தம் மைந்தன் ஓர் அலுவலை ஏற்றுப் பொருள் கொண்டுவர வேண்டும் என்று பேரவாக் கொண்டார். ஆனால், திருநாவுக்கரசு எங்கும் வேலை பெற்றாரில்லை. அக்காரணத்தால் அவர் சிறிதும் மனம் நைந்தாரில்லை. அவர் மனவன்மையும், முழு நம்பிக்கையும் இயற்கையிலேயே பெற்றவர். பொருள் பின்னர் வரும் என்று தீர்மானித்துத் தம் தமிழறிவை வளர்ப்பதி

லேயே கண்ணுங் கருத்துமாக இருந்தார். அவர் அப்போதே தம் கரத்தில் உரமாகப் பிடித்தார் திருக்குறளை. திருக்குறளிலுள்ள சொல்லழகும், பொருள் அழகும் அவர் உள்ளத்தைக் கவர்ந்தன. அதோடு நில்லாமல், அருஞ் சொற்களும், அணிகளும் நிறைந்த 'நைடதம்' என்னும் நூலையும் விருப்புடன் வாசிக்கத் தொடங்கினார். அவ்விரு நூல்களும் அவர் கையில் எப்போதும் குடிகொண்டு விட்டன. அவைகளின் நுட்ப திட்பங்களை அவ்வயதிலேயே அவர் நன்கு உணர்ந்து, இனிது சுவைத்தார். குடும்பத் தொல்லையையும், வறுமைப் பிணியையும் தமிழ் நூல்களை வாசித்தே அறவே ஓட்டிவிட்டார்.

## ௩. ஆசிரியர் அன்பும், கனிவும்

நாவுக்கரசு திருமணத்தால் பெருமகிழ்ச்சி அடைந்தாரில்லை. "பொருளில்லார்க்கு இவ்வுலகில்லை" என்றபடி, மாண்புள்ள நலங்களும், இன்பங்களும் அவர் மனைவாழ்க்கையில் எய்திற்றில்லை. வேலை இல்லாமல் இருந்த காலத்தை அவர் தவப்பொழுதாகவே மாற்றிக்கொண்டார். அது தான் தமிழ்க் கல்வியை வளமுறப்பெறத் தமக்குத் தகுந்த வாய்ப்பு என்று அறியலானார். பொருட் செல்வத்தை மதியாமல், தமிழ்க் கடலில் திளைக்க முன் வந்தார். அப்போது தமிழ்மொழியில் உள்ள, அறிவு செறிந்த, நுட்பம் நிறைந்த, இன்பம் பொதிந்த, தமிழ் நூல்கள் எல்லாவற்றையும் செவ்வனே கற்கவேண்டும் என்ற பேரவா அவருக்குப் பிறந்தது. பற்பல தமிழ் நூல்களை வாங்கி வாங்கிப் பேழைகளில் அடுக்கி அடுக்கி, அவைகளின் அழகைப் பார்த்துப் பார்த்துப் பேரின்பம் அடைந்தார். அப்போது அவரிடத்தில் பொருள் வேண்டிய அளவில் இல்லாமலிருந்தபோதிலும், அவர் தம் தாயினிடத்திலும்,

நிலவருமானத்திலிருந்தும் தாராளமாகப் பொருள் பெற்றுப் பேரன்புடன் தமிழ் நூல்களை வாங்கித் தனியின்பம் எய்தினர்.

தமிழாசையின் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகையில், நாவுக்கரசு நற்பேற்றின் பயனாகப் பெத்துநாய்க்கன் பேட்டையில், அது போழ்து பெருஞ்சிறப்பும், பெரும் புலமையும், சைவசித்தாந்தத்தில் தனிப்புலமையும் பெற்றுப் பொலிந்த, பூவை கலியாணசுந்தர முதலியார் அவர்களைத் தம் ஆசிரியராகப் பெற்றார். அத் தமிழாசிரியர் இயற்கையிலேயே எல்லோரிடத்தும் ஒரே தன்மையாக அன்பு வழங்கும் அருங்குணவள்ளல். தமிழ்க் கல்வி கற்க வருபவர்களிடமோ அவர் கொண்ட விருப்பமும், நம்பிக்கையும், உவகையும் மிகச்சிறிய நிலையில் மிளிர்ந்தன. அப்பெரியாருக்குப் பல மாணவர்கள் சென்னை முழுவதும் உண்டு. புண்ணியப் பெருந்தகையாகவும், பெருநோக்கம் பெற்றவராகவும் பொலிந்தமையால், அவர் அழுக்காறு என்பதை அறவே ஓட்டி, எல்லா மக்களுக்கும், சைவப் பிரசங்கம் எளிய இனிய செந்தமிழ் நடையில் தெளிவாகச் செய்துவந்தார். பல இளைஞர்களைப் பண்டிதர்களாகவும் திகழச்செய்தார்.

அத்தகைய அருங்குணம் வாய்ந்த, செம்மை பூத்த, "சைவ சித்தாந்த சரபம்" எனப் பெயர் பூண்ட பூவை - கலியாணசுந்தர முதலியாரைக் கண்ட போதே பரவசம் அடைந்தார் நாவுக்கரசு. ஆசிரியரும், மாணவரும் ஒருவரை ஒருவர் சந்தித்தபோது, இருவரும் பேருவகை பூத்தனர் எனக் கூறுதல் மிகையாகாது. கலியாணசுந்தரர் தம் அரும்பெரும் தொண்டரானார் நாவரசு. அவர் அப்பெரியார் இல்லத்திலேயே எப்போதும் இருக்கவும் துவங்கினர். திருவிளையாடற்

புராணத்திலிருந்து சிவஞானபோதம் வரையில் பற்பல தமிழ் நூல்களின் மாண் பொருள்களைத் தம் ஆசிரியரிடம் கேட்டுப் பேரின்பம் அடைந்தார். பின்னர் அவர் தம் ஆசிரியருக்குப் பணிகள் செய்வதும், பற்பல வழிகளில் தமது அன்பைக் காட்டுவதும், அவர் புகழைப் பேசுவதையுமே தமது இன்பத்தொழில்களாகக் கொண்டார். கலியாணசுந்தரர் நாவரசை "நயினு", "அம்மா", "அரசு", என்றுதான் செல்வப் பெயர்கள் வைத்து அழைப்பாராயினர். நாவரசு பற்பல புராணங்களும், சைவ சித்தாந்தமும், செம்மையுற அவ்வாசிரியரிடத்தே கற்றுப் புகழ் பெற்ருர். அச் சிறுவயதிலேயே அற்புதப் பாடல்கள் பாடவும் பழகிவிட்டார். சைவப்பிரசங்கம் தாமே செய்யவும் துவங்கிவிட்டார். எந்த இடத்திலும், எவர் அழைத்தாலும், மனக்களிப்புடன், பணத்தைப் பொருளாக மதியாமல், புகழையும், தமிழையுமே பெரும்பொருளாக மதித்து, யாண்டும் சைவ விரிவுரை செய்யத் துவங்கினர்.

> " தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
> தோன்றலிற் ருேன்ருமை நன்று."

என்ற திருக்குறளின் சாரத்தை நன்கு பருகினர். அவருக்குப் புகழ்மேல் ஆசை உண்டு; உலகில் உள்ள பணிகளிலும், செல்வங்களிலும் சிறந்தது புகழே என்று எண்ணினர். புகழையும், தமிழறிவையுமே குறிக்கோளாகக் கொண்ட நாவரசு பல்லாவரத்தில், தமிழ்த் தனிப் பீடத்தில் தனியாக செலுத்துகின்ற "சுவாமி வேதாசலம்" என்னும் "மறைமலையடிகளையும்" பிறிதொரு ஆசிரியராகக் கொண்டார். சுவாமிகள் நாவரசைக் கண்டபோதே அவர்மீது அளவிலா அன்பும் நம்பிக்கையும் கொண்டார். நாவரசு உத்தம மாணவர்களில் சேர்ந்த - அழுக்காறு என்பதை சிறிதும் அறியாத பெருந்தகை என்று அவர்

எண்ணுவாராயினர். அவர் எண்ணியவாறே, சுவாமி களின் விருப்பின்படி நின்று, மாணவன் இலக்கணம் இத் தன்மைத்து என்று பண்டைய புலவர் பெருமான் பவ ணந்தி அடிகள் கூறிய,

" கோடன் மரபே கூறுங்காலைப்
பொழுதொடு சென்று வழிபடல் முனியான்
குணத்தொடு பழகி அவன் குறிப்பிற் சார்ந்
திருவென இருந்து சொல்லெனச் சொல்லிப்
பருகுவ னன்ன ஆர்வத்த னாகிச்
சித்திரப் பாவையின் அத்தக வடங்கிச்
செவி வாயாக நெஞ்சுகள னாகக்
கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்துப்
போவெனப் போத லென்மனார் புலவர்"

என்னும் திருவாக்கின்படி நடந்து, ஒப்புயர்வற்ற அரும் பெறல் மாணவரானார் நாவுக்கரசு.

மறைமலையடிகள் சங்கநூல்களில் பெரும் பயிற்சி பெற்றவர் என்பதை அறிந்து, நாவுக்கரசு அவரிடமே சங்க நூல்கள் பாடம் கேட்கலானார். சைவ சித்தாந்தத்தின் தேனமுதும் அவரிடம் அருந்துவாராயினார். "பத்துப் பாட்டு" என்னும் சங்கநூலிலுள்ள "பட்டினப்பாலை" என்பதை நாவுக்கரசு தனியின்புடன் கற்று, அதிலுள்ள திட்ப, நுட்பங்களைப் பெரிதும் வியந்தார். சங்கப் புலவர் கள் பெற்றிருந்த பேராற்றலை இன்னும் பற்பல சங்கநூல் களின் மூலமாகக் கண்டு களிபூத்தார். தமிழ்க் கல்வி செம்மையுறப் பெற்றுத் திகழ்வதைக் காட்டிலும், சிறந்த செல்வம் உலகில் வேறில்லை என்றும் எண்ணினார். மறை மலை யடிகளின் நல்லிணக்கம் வாய்த்ததிலிருந்து அவர் தமிழ்க் கலைகளின் இன்பக் கடலிலேயே திளைப்பாராயி னார். சுருக்கிச் சொல்லுமிடத்து, அவர் தமிழையே தன்

அன்னையாகவும், நண்பனாகவும், கடவுளாகவும் கொண்டு, அதனோடு தினந்தினம் உறவாடிப் பெருமகிழ்ச்சி பூத்தார். சுவாமிகள் எழுதியிருந்த வசன நூல்களையும் ஓதி, அவர் தம் புதிய நடையையும், ஆற்றலையும் வியந்தார். அவர் தம் ஆங்கில அறிவின் திறத்தையும் கண்டு, தாமும் ஆங்கிலப் புலவர்கள் எழுதிய நூல்களையும் ஆர்வத்துடன் கற்பாராயினார். தமிழ்ப் புலவர்கள் காட்டிய இயற்கைப் பொருள்களின் அழகுகளையும், ஆங்கிலப் புலவர்களின் அத்தகைய அழகுகளையும் ஒப்பிட்டுப் பார்க்கலானார். தமிழ்ப் புலவர்கள் பேரறிவிலும், பேராற்றலிலும் ஆங்கிலப் புலவர்களினும் சிறந்து இருத்தலையும் கண்டார். எனவே, தமிழையே தம் உயிரினுஞ் சிறந்த பொருளாகக் கருதினார் நாவுக்கரசு.

நாவரசு, பூவை - கலியாண சுந்தரனாரையும், மறைமலையடிகளையும் அன்புமிக்க ஆசிரியர்களாக மாத்திரம் கருதவில்லை; கருணை ஒழுகும் கடவுளாகவும் கருதினார். தம் தந்தையரினும் சிறந்தவர்களாகவும் அவர்களைப் போற்றிப் புகழ்ந்தார். எப்போதும் ஆசிரியர்கள் இல்லங்களில் அமர்ந்து, அவர்கள் கூறும் உரைகளைப் பொன்னுரைகளாகக் கருதி, அவர்கள் திருமுகங்களைக் கண்டு களிபூத்தார். அவர்கள் இல்லங்களைத் தம் இல்லத்தினும் சாலச் சிறந்தவைகளாக எண்ணினார். அவர்களுக்குப் பற்பல பணிகள் புரிவதைத் தம் பேரின்பச் செயல்களாகக் கருதித், தம்மால் இயன்ற எத்தகைய உதவிகளையும் பேருவப்புடன் செய்து, அவர்கள் இருவர் உள்ளங்களிலும் தனியிடம் பெற்றார். தாம் விரும்பிய பொருள் எதையும் ஆசிரியர்களுக்கு அளிப்பதுதான் நாவுக்கரசுக்குப் பெருமகிழ்ச்சி. அவர்களிடத்தில் நன்றி பாராட்டும் தன்மையோ ஒப்பற்றது. எந்தப் பணி இருந்தாலும், ஆசிரியர்கள் அழைப்

பையே தலைசிறந்த பொருளாகக் கருதி, அவர்கள் இல்லம் சேர்ந்து, வேண்டிய உதவிகளையோ, பணிகளையோ செய் வார். ஆதலால், இரு ஆசிரிய மணிகளும் நாவுக்கரசைத் தம் அருமைப் புதல்வனாகவே கருதினார்கள். அவர்கள் தங்கள் கண்ணெனவே நாவுக்கரசைக் கருதி, அவரிடம் அளவில்லா அன்பு செலுத்தினார்கள். மறைமலையடிகள் தம் இல்லத்தைப்பற்றிய எவ்வித கருத்தையும் நாவுக்கர சைக் கேட்பார். நாவரசும் உவப்புடன் தம் கருத்தை அறிவிப்பார். அத்தன்மையில்தான் நாவுக்கரசின் கருத் தின்படி மறைமலையடிகள் சென்னையைவிட்டுப் பல்லா வரம் சென்று வாழ்ந்து வரலானார்.

## ௬. தமிழறிவின் முதல் ஒளி

நாவுக்கரசு நற்றமிழ் வளம்பெறக் கற்றுக் கல்விப் பொருளை இனிதுபெற்று வந்தாலும், செல்வப் பொருளில் குறையே கண்டார். வறுமை என்னும் கொடிய பாவி, மனையின் பெருமையைக் குலைக்க முன்வந்தான். இணை யில்லா அன்புடைய அவர் இனிய அன்னையும் வறுமைப் பிணியால் மனம்புழுங்கி வந்தமையால், தன் மைந்தன் இல்லிற்கு வேண்டிய பொருளைச் சம்பாதித்து வருவான் என்றும், பின்னர் பொன்னும் மணியும் தேடிவைப் பான் என்றும் பெருங் கோட்டை கட்டினார். அவ்வம்மை யார் எண்ணியவண்ணம் நாவுக்கரசு அவர் உள்ளம் உவக் கும்படி பொருள் தேடி அளிக்கவேண்டும் என்று எண்ணி, எண்ணிலா முயற்சிகள் புரிந்துவந்தார். சென்னைமா நகரில் தகுந்த பணி ஒன்றும் அவர் பெற்றார் இல்லை. அந்நாளிலும் வேலையில்லாத் துயரம் சென்னையில் உள்ள இளையோர்கள் உள்ளங்களில் குடிகொண்டு இருந்தது. தம் அன்னையின் மனத்தை மகிழ்விக்கவேண்டும் என்று

நாவுக்கரசு உத்தியோகம் தேட எய்திய இன்னல்கள் அளவில. அவர் முயற்சிகள் அனைத்தும் பாழாயின என்றாலும், அவர் மனம் மாத்திரம் நம்பிக்கை மாண்பில் ஒருசிறிதும் குறையவில்லை. அல்லல்களை அடுக்கடுக்காகப் புகுத்துகின்ற கொடிய வறுமையால் அவர் அன்னை மனம் வருந்துகையில், எதிர்பாராதபடி தேகப் பிணிக்கும் அடிமையானார். அப்பிணி, மெல்ல மெல்ல வன்மை யுற்றுப் பெருங் கொடிய பிணியாயிற்று. பின்னர் அப் பிணியே நாவரசின் நற்றாய்க்குக் கொடுங் கூற்றுவனாயிற்று.

நாவரசின் இல்லத்தில், இல்லின் தனி அரசியாகிய அவர் அருமைத் தாய், துன்பம் செறிந்த இம் மண்ணுலக வாழ்வை விட்டு, இன்பம் நிறைந்த விண்ணுலக வாழ்வை அடைந்தபோது, குடும்பத்தார் அனைவரும் எய்திய துன்பம் இத்தன்மைத்தென்று சொல்ல இயலாது. நாவுக் கரசின் அன்னையார் மண்ணுலகை விடும் முன்னர், மாண் பமைந்த மைந்தன் திருநாவுக்கரசை விட்டுப் பிரிய மனமில்லாமல், இடுக்கண் எய்தினர், நாவரசு அருகே அமர்ந்து, அன்னையின் துயர்முகத்தைக் கண்டு, "அம்மா! வருந்தாதே! அரன்அடி அடையுங்காலம் வந்தது போலும்! மனவன்மை பெற்ற தாங்கள் எங்களைவிட்டுப் பிரிய மனமில்லாமல் வருந்துகிறீர்கள்! நாங்கள் எவ்வாறு உலகில் நலம்பெற்று வாழ்வோம் என்று எண்ணுகிறீர்கள் போலும்! ஆண்டவன் அருள், தங்கள் அருளால் எங்க ளுக்கு நிரம்ப இருக்கும். விரைவில் நான் ஒரு நல்ல உத்தியோகத்தைப் பெறுவேன். என் இளவல் சம்பந்தன் இரயில்வேயில் உத்தியோகம் முன்னமே பெற்றுவிட்டான். மற்றொரு இளவல் கோட்டீஸ்வரன், எட்டாவது வகுப்பில் தானே வாசிக்கிறான் என்று அஞ்சவேண்டாம். அவன் பி. ஏ. பட்டம் பெறும்படி நான் பார்த்துக்கொள்ளு

கிறேன். என் தமக்கை அங்கயற்கண் அம்மையின் மனக்குறையை நான் எப்போதும் தீர்ப்பேன். அவ் வம்மையின் வறுமைக்காக வருந்தவேண்டாம். ஈசன் இணையடியை நண்ணும்போது, இம் மண்ணுலகவாழ்வின் துயரை எண்ணவேண்டாம். இறைவனையே சிந்தனைசெய், அம்மா!" என்று மிகுந்த மன ஊக்கத்துடன், ஒரு பொட்டுக் கண்ணீரும் சிந்தாமல் கூறினார். அவர் அன்னை யார், தம் அருமை மைந்தன் அறிவுள்ள மொழிகளைக் கேட்டு, அந்நிலையிலும் புன்னகை பூத்து, "அப்பா! நான் வருந்தவில்லை. மரணமென்பது எல்லோருக்கும் ஒரு நாள் வந்தே தீரும். என் குறைகள் இரண்டையும் நீ அறிந்து, அவைகளை நீக்கவும் எண்ணங்கொண்டாய்! அதுவே போதும்! என் மைந்தர்களாகிய நீங்கள் மூவரும் பேரும், புகழும், பொருளும் பெற்று, இவ்வுலகில் நன்கு வாழ்வீர்கள்! இது திண்ணம்! ஆனால், நான்தான் உங்கள் நல்வாழ்வையும், பெரிய நிலையையும் கண்டு களிக்கக் கொடுத்து வைக்கவில்லை. உங்கள் தந்தைதான் கொடுத்து வைத்தார். அப்பா! நான் போகின்றேன்! வேளை வந்து விட்டது! ஒருவரும் அழவேண்டாம்! என்னை உன் மடிமீது அமர்த்திக்கொள்" என்று கூறினார். அப்போ தும் நாவுக்கரசு மனம் கலங்காமல், தம் அருமை அன்னை யைத் தம் மடிமீது அமர்த்திக்கொண்டார். அப் போது அவர் அன்னையார் அவரை நோக்கி, "கண்ணே! என் இரு கண்மணிகளும் என் இரு பக்கங்களிலும் இருக் கட்டும்!" என்று மொழிந்தார். நாவுக்கரசு அன்னையின் குறிப்பறிந்து, தன் இரு இளவல்களையும் அன்னையார் இரு மருங்கிலும் அமரச்செய்தார். அப்போதுதான் அன்னை யார் மனம் அமைதியுற்றது. அதுபொழுதுதான், ஈசன் இணையடியும் அணுகிற்று. அவர் அன்புருவாய அன்னை

யார் அரைக்கணத்தில் மறைந்தார்! எல்லோரும் "ஓ!" வென்று அலறி அழுதார்கள். ஆனால், நாவுக்கரசு மாத்திரம் அப்போதுகூட ஒரு சொட்டுக் கண்ணீரும் விட்டாரில்லை. மன ஊக்கம் வன்மையாகப் பெற்றுத் தம் இளவல்களுக்கும், சகோதரிக்கும் ஆறுதல் கூறினார். அவர் மனத்திடத்தின் மாண்பு பெரிதும் வியக்கத் தக்கதே!

நாவுக்கரசு இல்லற வாழ்வின் துவக்கம் இவ்வளவு துன்பமாகவே இருந்தது. தம் உயிரினுஞ் சிறந்த அன்னையார் தம்மைவிட்டுப் பிரிந்தார் என்றும், அவர் தம் நல் வாழ்வைக் கண்டு களிக்காமல் மறைந்தார் என்றும், அவர் தமது உள்ளத்தில் உரைக்கவொண்ணத் துயர் அடைந்தார் என்பதில் ஐயமில்லை. அவர் தம் அன்னையாருக்கு என்ன கைம்மாறு செய்ய முடியும் என்று எண்ணினார். அன்னையாருக்கு அப்போது செய்யும் கைம்மாறு ஒன்று தான் உளது என்று எண்ணினார். அதாவது, தாம் பெற்ற இனிய தமிழறிவின் ஒளியில் ஒரு சிறிதைத் தம் ஆற்றலுக்கு ஏற்ப, ஒரு பாட்டின் மூலமாகக் காட்டத் துணிந்தார். நாவுக்கரசு குடும்பத்திலேயே தமிழன்னை இருக்கை கொண்டாள் என்று எண்ணுமாறு, அவர்தம் அன்னையார் இறந்த பதினாறும்நாள், தம் இல்லத்தில் முதல் முதலாகச் சைவ விரிவுரை கமழச்செய்தார். அப்போது அவர் அன்னையார்மீது "பிரிவாற்றாமை" ஒன்று அச்சிட்டு, அங்கு வந்த அன்பர்கள் அனைவர்க்கும் வழங்கினார். அந்த இளவயதிலேயே அவர் யாத்த பாட்டு, சிறந்த ஓசை இன்பத்தையும் சொல்லழகையும் பொருளழகையும் பெற்றுத் திட்பமும் நுட்பமும் செறிந்து விளங்கியது.

## ரு. தமிழாசிரியராகப் பேரவா!

நாவுக்கரசு தம் அன்னையை இழந்து, துயருழந்து, வறுமைப்பிணியை எதிர்த்து, வாழ்க்கையில் வெறுப்புற்று, பற்பல உத்தியோகங்களைத் தேடித் தேடி மனம் நொந்தார். அவர் ஆங்கில அறிவிற்கு ஏற்பப் பொருள் ஈட்டுங் காரணத்தால், பல இடங்களில் தேடி, ஒன்றும் பொருத்தமாகக் கிடைக்கப்பெறுமல், இறுதியில் ஜி. ஏ. நடேசன் புத்தகசாலையில் ஒரு கணக்கப்பிள்ளை வேலையை ஏற்றுச் சிறிது காலம் மனக்கசப்புடன் பார்த்துவந்தார். பின்னர் அவ் வேலையை விட்டு, "ஓஅண்டு கம்பெனி" அச்சுக்கூடத்தில் ஒரு கணக்கப்பிள்ளை வேலையைப்பார்த்து, மனம் உடைந்தார். பின்னர், குமாரசுவாமி நாயுடு அச்சகத்தில் பிழை திருத்தும் வேலை பார்த்தார். அதுவும் கசப்பாகவே இருந்தது. மாதம் நூறு ரூபாய் பெறுவதாக இருந்தாலும், எந்த ஆபீசிலும் ஒரு கணக்கப்பிள்ளை வேலையைப் பார்ப்பது துன்பத்தைத் தருவதேயாகும் என்றும், ஏனைய அடிமைப் பதவிகள் எதுவும் கூடாதென்றும், நாவுக்கரசு தீர்மானித்து வருகையில், வேப்பேரி எஸ். பி. ஜி. உயர்தரப் பாடசாலையில் ஒரு தமிழ்ப் பண்டிதர் வேலை காலியாயிற்று. அப்போது அப்பாடசாலையின் தலைமைத் தமிழ்ப் பண்டிதராக விளங்கினுர் கா. ரா. நமசிவாய முதலியார் என்பவர். அப்புலவர் பெருமானிடத்தில் பேரன்பு பூண்டு விளங்கினுர் நாவுக்கரசு. அவரோடு பன்முறை பழகி, அவர் மதிப்பையும் பெற்று, அவருக்கு ஓர் இளவல் போலவும் இலங்கினுர்.

நாவுக்கரசு தமது வாழ்வில் ஒப்பில்லாச் சிறப்புடைய பதவி ஆசிரியர் பதவியே என்று எண்ணியிருந்தமையால், அவர் தாம் ஒரு பாடசாலையில் பண்டிதராக வேலை பார்க்க

வேண்டும் என்று பேரவாக்கொண்டிருந்தார். அவர் விருப்பிற்கு ஏற்பப் புலவர் பெருந்தகை நமசிவாய முதலியார், நாவரசை வேப்பேரி பாடசாலையில் ஒரு தமிழ்ப் பண்டிதராகச் செய்தார். அஞ்ஞான்று நாவுக்கரசு அடைந்த இன்பிற்கு எல்லையில்லை என்று சொல்லலாம். அவர் தமிழ்ப்பண்டிதப் பதவி ஏற்ற நாளைத்தான் தம் வாழ்நாட்களில் தலைசிறந்த நாள் என்று கருதினார். அளவில்லா ஆர்வத்தோடும், ஊக்கத்தோடும் தமிழ்ப்பண்டிதர் வேலையைப் பெற்றுத் தமது ஆசிரியத்தொழிலை வெகு திறம்படப் பார்த்துத் தம் பேச்சுவன்மையாலும், போதனுவன்மையாலும், கல்வித்திறத்தாலும் மாணவர் உள்ளங்களை மிக விரைவில் கவர்ந்துகொண்டார்.

## கூ. பண்டித உலகில் புதுமை

திருநாவுக்கரசு பண்டிதப் பதவியை ஏற்கும் நாளில், பொதுவாகப் பற்பல இடங்களிலுள்ள பாடசாலைகளிலும், முக்கியமாகச் சென்னையிலுள்ள பாடசாலைகளிலும் வேலை பார்த்துவந்த, பற்பல பண்டித மணிகளும், தங்கள் புலமைக்கு ஏற்ப ஊதியமும் மதிப்பும் பெறவில்லை. பாடசாலைகளின் அதிகாரிகளும் அவர்கள் புலமையை நன்கு மதித்துப் பொருள் அளிக்கவும் முன்வரவில்லை. தலைமை ஆசிரியர்களும் தமிழ்ப் பண்டிதர்களுக்குத் தகுந்த மதிப்பு அளிக்கவில்லை. தமிழ்மொழியின் சிறப்பு அன்னிய நாட்டார் ஆட்சியினுல் மிகப்பெரிதும் குன்றி இருந்தது. இந்நிலையில் தமிழ்ப்பண்டிதர்கள் பெருமித உடையணிந்து, பதவிக்கேற்ற காட்சியை வகுப்புக்களில் மாணவர்களுக்கு அளிக்க வசதி பெறவில்லை. மேலும், நமது நாட்டில் நெடுங்காலமாக நிலவிவரும் கொள்கையாகிய "உலகம் பொய்; பொருளும் பொய்; உடலும் பொய்," என்ற

துறவியின் அறிவு நம் பண்டைத் தமிழ்ப் பண்டிதர்கள் உள்ளத்திலும் உரம்பெற்றது. அவர்கள் ஆடையையும் மதிக்கவில்லை; அவமதிப்பையும் பொருட்படுத்தவில்லை. அவர்களில் பெரும்பாலோர் எளிய உடைகளை அணிந்து, நெற்றியில் பழுக்க விபூதியோ, அல்லது பரக்க நாமமோ தரித்துக்கொண்டு வகுப்புக்களில் வருவார்கள். மாணவர்களுக்கு நகையும், கூத்தும்தான் ஏற்படும். பண்டிதர் வகுப்பு என்றால், பரிகாச வகுப்பு என்றும், ஆனந்தக் களிப்பு என்றும் மாணவர்கட்குத் தோன்றிற்று. தமிழ்ப் பண்டிதர்களைச் "சாமி" என்றும், "ஐயா" என்றும் சில மாணவர்கள் அழைப்பதும் உண்டு. பண்டித வகுப்பில் பிள்ளைகள் பரிகாசம் செய்துகொண்டு, பற்பல சேட்டைகள் புரிவதும் உண்டு. சுருங்கச் சொல்லுமிடத்து, பண்டிதரைத் தமிழ்ப்பாடம் நடத்தப் பிள்ளைகள் இடங் கொடுக்கமாட்டார்கள். இத்தொல்லையை நீக்கச் சில பண்டிதர்கள் வகுப்புக்களில் "தேவாரமோ, திருப்புகழோ" பாடி மாணவர்களை வசப்படுத்துவதுமுண்டு. ஏதோ சிற்சில பாடசாலைகளில் தமிழ்ப்பாடம் ஒருவாறு கற்பிக்கப்பட்டு வரும். ஆனால், வேப்பேரி உயர்தரப் பாடசாலையில் முதன்முதலாகப் பெருமிதத்தையும், மதிப்பையும் காட்டத்தக்க அழகிய உடை அணிந்து, நற்காட்சி மாணவர்களுக்கு அளித்தவர் நமசிவாய முதலியாரே!

பாடசாலைகளில் பண்டிதர்களின் பெருமையை நமசிவாய முதலியார் உயர்த்தியதுபோலவே, நாவுக்கரசும் உயர்த்தினார். அவரும் பெருமித உடையும், சரிகைத் தலைப்பாகையும் அணிந்து, மாணவர்களுக்குப் பண்டிதர்களும், மற்றைய ஆசிரியர்களைப்போல், உடையிலும், உலக நடையிலும், மாட்சிமை காட்ட வல்லவர்களே என்பதை நாவுக்கரசு வேப்பேரி பாடசாலையிலேயே காட்டிவிட்டார்.

நமசிவாய முதலியாரையும், நாவுக்கரசையும் அண்ணன், தம்பி என்றும், மாணவர்கள் கருதலானார்கள். ஏனெனில், இருவரும் ஏறக்குறைய ஒரேவித தோற்றமும், உடை நடை பாவனையும் பெற்றிருந்தனர். சந்தனத்திலகமும் அவர்கள் நெற்றிகளில் ஒரே தன்மையாக மிளிர்ந்தன. இருவரும் கருநிறமேனி பெற்றிருந்தனர். ஆனால், கருமையின் அழகை அவர்கள் முகவொளிகளில் மாணவர்கள் கண்டு களிப்புத்தார்கள். இருவரும் புன்முறுவல் காட்டி, இன்மொழிகள் வழங்கி, அரும்பொருள்களைப் பாடங்களில் தெரித்துக் காட்டுவதில் மிகவும் வல்லுநர்கள்.

## முத்தியால்பேட்டை உயர்தரப் பாடசாலை

நாவுக்கரசு ஒரு பாடசாலையில் தமிழ்ப்பண்டிதர் பதவியைப் பெற்று, மனம் களித்து, மனைவாழ்க்கையில் சிறிது மனவமைதி பெற்று வருங்காலையில், மற்றுமொரு பெரிய இன்னலுக்கு ஆளானார். எவரும் எதிர்பாரா வண்ணம், அவர்தம் செழுந் திருமனைவியார், "நவநீதம்" என்னும் கற்பரசி, மணிமங்கலம் என்னும் கிராமத்தில் இரண்டொரு நாள் நோயில் உழன்று, இம்மண்ணுலக வாழ்வை ஒல்லையில் நீத்தார். தொல்லைப்பிறவியை ஒழித்த நாவுக்கரசரின் வாழ்க்கைத் துணைவியார் உலகை நீத்த போது, அவர் குடும்பத்தார் அனைவரும் அலறிக் கதறினார்கள். ஆனால், நாவுக்கரசு அஞ்ஞான்றும் ஒரு சொட்டுக் கண்ணீரும் விட்டுப் புலம்பினார் இல்லை. இறைவன் திருவருளையே மனத்தில் எண்ணிப் பேசாமை பூண்டார். ஊரார் அனைவரும் அவரை வந்து கண்டபோது, அவர் சற்றும் தளராமல் மனவன்மையுடன் அவர்களிடம் பேசினார். அவர் மனம் கல்லோ, இரும்போ என்றும் பின்னர் அவர்கள் பேசிக்கொண்டனர். பெண்மணிகள் நாவுக்கரசைக் கன்மனத்தார் எனவே எண்ணிக்கொண்டனர்.

நாவுக்கரசு தம் அருமை மனைவியை இழந்தபோது, அவ்வம்மையார்மீது பிரிவாற்றுமைப் பாடல்கள் அவர் இளவல் ஞானசம்பந்தமும், மாணவர்கள், பாரிப்பாக்கம், கண்ணப்ப முதலியாரும், மயிலை, சிவ. முத்துக்குமார சுவாமி முதலியாரும்தான் பாடினார்கள். நாவுக்கரசு தம் மனைவிமீது ஒரு பாடலும் பாடவில்லை. அதன் காரணம் பின்னர் விளங்கலாயிற்று. அவர் இல்லரசி உயிரோடு இருந்த காலத்திலேயே, அவர்மீது இருபத்தைந்து அருமைப் பாடல்கள், அவ்வம்மையார் இறந்த பின்னர் தாம் பாடும் பிரிவாற்றுமைப் பாடல்கள்போலவே பாடினார். அவ்வம்மையாரிடம் படித்துக் காட்டி, அவற்றின் அரும் பொருள்களையும், அழகுகளையும், நயங்களையும் விளக்கி, அவ்வம்மையார் உள்ளத்தில் இன்ப ஊற்றைத் தோற்றுவித்தார். இறந்தபின்னர் பாக்களைப் பாடிப் புகழ் மாலைகள் போடுவதைக் காட்டிலும், உயிருள்ள போதே தம் மனைவிக்குத் தமது அன்பின் பெருக்கை எடுத்துக் காட்டிவிட்டார். அவ்வம்மையாரும் திடமனமும், மண்ணுலக வாழ்வில் வெறுப்பும் உடையவராக இருந்தமையால், தம் நாயகர் நாவுக்கரசின் செயலை வியந்து, மகிழ்ந்தாரேயன்றித் தவறான எண்ணம் கொள்ளவில்லை. அவ்வம்மையாரின் உள்ளத்தில் உவகையே பொங்கிற்று. நாவுக்கரசும் மனம் மகிழ்ந்தார். அவர் முன்னதாகவே தம் மனைவியார் இறந்துவிடுவார் என்று அறிந்தனரோ என்று எல்லோரும் எண்ணினார்கள்.

நாவுக்கரசு முதலில் அருமை அன்னையாரை இழந்தார். பின்னர் தம் கற்பரசியை இழந்தார். இரண்டும் மாப்பெரும் இன்னல்களே. அவற்றைப் பொறுத்துக் கொண்டு மனம் தளராமல் இருந்தபோது, அவர் விரும்பியபடியே, முத்தியால்பேட்டை உயர்தரப் பாடசாலையில்

பண்டிதராயிருந்த திரு. தணிகாசலம் பிள்ளை அவர்கள் உதவியால் பண்டிதப் பதவி கிடைத்துவிட்டது. உலகில் இன்பமும் துன்பமும் மாறி மாறி வருவது இயற்கையே என்பதை, நாவுக்கரசு தமது வாழ்க்கையிலே முதன் முதலாகக் கண்டார். அவர் முத்தியால்பேட்டை பாடசாலையில் தமிழ்ப் பண்டிதராக வந்ததும், அவர் பேரும் புகழும் மிகப்பெரிதும் பரவலாயின. அப்பாடசாலையிலும் தமிழ்ப்பண்டிதர்களின் இருக்கை உயர்ந்தது; தரமும் உயர்ந்தது; மதிப்பும் உயர்ந்தது. ஆங்கில ஆசிரியர்களுக்கும், தமிழாசிரியர்களுக்கும் காணப்பட்ட வேறுபாடும் மறைந்தது. தமிழ்ப் பண்டிதர் இத்துணைச் சிறந்த தோற்றத்திலும், உடையிலும் திகழ்கின்றாரே என்று மாணவர்கள் பேசிக்கொள்வார்கள். நாவுக்கரசு வெகு விரைவில் மாணவர்கள் உள்ளங்களைக் கவர்ந்ததோடு, தலைமை ஆசிரியர் உள்ளத்தையும் தமது கல்வித்திறத்தாலும், பேச்சு வன்மையாலும் பாடஞ் சொல்லும் முறையாலும் கவர்ந்துவிட்டார். அதன் பயனாக, நாவுக்கரசு தாம் நெடுங்காலமாக விரும்பிய தலைமைத் தமிழ்ப் பண்டிதர் பதவியையும் பெற்றுவிட்டார்.

நாவுக்கரசு தலைமைத் தமிழ்ப்பண்டிதர் பதவியைப் பெற்றதும், மீண்டும் இல்லற வாழ்வில் புதுமையாகப் புகுவாராயினர். இரண்டாம் முறை திருமணம் புரிந்து கொள்ள மனம் துணிந்துவிட்டார். வாலாஜா நகரில் முனிசிபல் ஆபீசில் உத்தியோகம் புரிந்துவந்த கனகசுந்தர முதலியார் என்பவர் பெற்ற, சரஸ்வதி என்னும் பெயர் பூண்ட பொற்கொடியை மணந்தார். கொழுநனைக் கடவுளே என்று உள்ளபடியே எண்ணுகின்ற மனப்பான்மை வாய்ந்தவர் அவ்வம்மையார். குறிப்பறிதலும், காதலன் காதல்வகை புனைதலும், அவனை மகிழ்வித்தலும், பணித

லும், இன்மொழி பகர்தலும், புன்முறுவல் செய்தலும், பணிவிடை ஆற்றலையுமே தமது இன்பத்தொழிலாகக் கொண்டார். அப்பொற்கொடி நாவுக்கரசின் இல்லம் வந்ததும், திருமகளும் உடன்வரத்துவங்கினாள். அவர் இல்லம் அன்றுதொட்டுப் பாலுந் தேனும் பல்கும் பண் புற்ற இல்லமாயிற்று. நாவுக்கரசு பற்பல விரிவுரைகள் மூலமாகவும், கட்டுரைகள் மூலமாகவும், மாதப்பத்திரிகை கள் மூலமாகவும் வேண்டிய பொருள் எளிதில் பெற்றார். அப்போதுதான் அவர் இல்லற வாழ்க்கை, பண்பும், பயனும் உள்ள நல்லற வாழ்க்கையாயிற்று.

## எ. பச்சையப்பன் கல்லூரியின் பேராசிரியர்

நாவுக்கரசு ஓர் உயர்தரப் பாடசாலையில் தலைமைத் தமிழ்ப் பண்டிதர் பதவியை ஏற்று, மாணவர் உலகைத் தம் வசப்படுத்திப் பெரும்புகழ் பெற்றதும், தாம் ஒரு கல்லூரியின் பேராசிரியராக விளங்கவேண்டுமென்னும் பேரவாக் கொண்டார். அவர் நல்லெண்ணமும், பரந்த உள்ளமும், எல்லோர் மாட்டும் ஒரேவிதமான நடுநிலையும், அன்பும் காட்டும் மனப்பான்மையும் பெற்றிருந்தமையால், அவர் விரும்பியவண்ணமே எதிர்பாராதபடி, பச்சை யப்பன் கல்லூரியில் தமிழ்ப்பேராசிரியர் பதவியைப் பெற்றுவிட்டார். நாவுக்கரசு அப்பதவியைப்பெற்றபோது பெருமகிழ்ச்சி பூத்தார். அவர் அறிவையும், ஆற்றலையும் வியந்த மாணவர்கள், தமிழ்க் கடலின் இன்னமுதை மிகுதி யாகப் பருகிய நாவுக்கரசுக்கு அப்பதவி சிறந்த பதவி அல்ல என்று சொல்லிக்கொண்டார்கள். பச்சையப்பன் கல்லூரியில் சென்றபோதே, அவருடனே தமிழ் அன்னை யும் அக்கல்லூரியில் புகுந்தனள் என்று சொல்லுமாறு, பசுந்தமிழ் தனியரசுபுரியும் கல்லூரியாக அது மிளிர்ந்தது.

கல்லூரி மாணவர்கள் அவர் மணி மொழிகளையும், விண் மாரி எனச் சொன்மாரி பெய்யும் பேராற்றலையும் கண்டு, அவர்கள் அனைவரும், ஒரு தலைமகனிடம் ஒரு தலைமகள் வசம் அழிந்தாற்போல், நாவுக்கரசிடம் தம் வசம் அழிந் தார்கள். ஆங்கிலப் பேராசிரியர்களின் சொற்பொழிவு களை மாணவர்கள் அப்போதுதான் நாவுக்கரசு புரிந்த சொற்பொழிவுகளோடு ஒப்பிட்டுப் பார்த்தார்கள். அப் போதுதான் ஆங்கிலப் பேராசிரியர்களும், தமிழ்ப் பேரா சிரியர்களும் ஒரேவித ஆற்றலும், பெருமையும் பெற்ற வர்கள் என்று உணர்ந்தார்கள். ஷேக்ஸ்பியர் நாடகத்தின் அருமை பெருமைகளையும், நுட்ப திட்பங்களையும் ஆங் கிலப்பேராசிரியர்கள் எடுத்து விளக்கியதுபோல், திரு நாவுக்கரசர் தமிழ்மொழியில் சிறந்து ஒளிரும் திருக்குறள், சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை இவை களில் பற்பல பாடல்களைப் பாடங்களோடு அவ்வப்போது இணைத்து அவைகளின் நயங்களை எடுத்து விளக்கி, மாண வர்கள் பரவசம் அடையும்படி செய்தார். அவர் கல்லூரி யில் வகுப்பு மேடையில் நின்று சொன்மாரி பொழிந்துகை யில், அவர் பெருமிதத் தோற்றத்தையும், புன்னகையையும், இன்பம் செறிந்த பொன் மொழிகளையும் கண்டு கேட்ட மாணவர்கள் அவர் விரிவுரை செய்யும் தனியழகை இன் றும் சொல்லிச்சொல்லி வியக்கின்றார்கள். நாவுக்கரசு எப்போது வகுப்புக்கு வருவாரோ என்று மாணவர்கள் ஆவலோடு அவர் வருகையை எதிர்பார்ப்பார்கள். அவரை விட்டுப் பிரிய எந்த மாணவனும் மனம் துணியமாட்டான். அவர் சொற்பொழிவை இன்னும் கேட்கவேண்டும், இன்னும் கேட்கவேண்டும் என்று மாணவர்கள் பேரவாக் கொண்டார்கள். நாவுக்கரசு இத்துணைச் சிறப்பையும், புக ழையும் பெற்றுப் பச்சையப்பன் கல்லூரியில் விளங்கினார்.

நாவுக்கரசு மாணவர்களிடத்தில் பேரன்புடையவர். ஒரு மாணவன் மனத்தையும் நோகச்செய்யார். கல்வியில் ஊக்கத்தையும், இன்பத்தையும் குறைந்த அறிவுபெற்ற மாணவனுக்கும், புத்தம் புதிதாக ஊட்டுவாரேயன்றிப் புன்மொழிகள் கூறி மாணவர் உள்ளங்களை உடைக்க மாட்டார். எல்லோர்க்கும் இன்பூட்டுவதே அவரது இயல்பு. தேர்வுகளில் கால் மார்க்கு, அரை மார்க்குப் போடுகிற வழக்கமே அவரிடம் கிடையாது. எந்த விடைக்கும் ஒரு மார்க்குக்குக் குறைத்தே கொடுக்கமாட்டார். பரீட்சையில் மாணவர்கள் தவறுவதையும் பொறுக்கமாட்டார். மார்க்குகளும் தாராளமாக வழங்கும் வள்ளல் என்று நாவுக்கரசை மாணவர்கள் வாயார வாழ்த்துவார்கள்.

பச்சையப்பன் கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியரான சில ஆண்டில் பல்கலைக்கழகத் தேர்வாளராகவும் நியமிக்கப் பட்டார். அப்போதுதான் ஒரு தமிழ்ப் பேராசிரியர் கல்வித்துறையில் அடையவேண்டிய சிறப்புக்கள் அனைத்தையும் அடைந்துவிட்டதாக அவர் எண்ணி மகிழ்ச்சியுற்றார். அத்தகைய உயர்ந்த பதவியைத் தமக்கு அளித்த தமிழ்மணம் கல்லூரிகளில் இன்னும் மிகுதியாகக் கமழ வேண்டும் என்றும், பி.ஏ., எம்.ஏ., பட்டங்களைப்போல், தமிழிலும் வித்துவான், புலவன் என்னும் பட்டங்கள் தோன்றவேண்டும் என்றும் விரும்பினார். அத்தகைய பட்டங்கள் பல்கலைக் கழகங்களில் தோன்றினால்தான் மாணவர் உலகிலும், தமிழ் மக்கள் உலகிலும், தமிழ்த்தாய் தனியரசு செலுத்துவாள் என்று எண்ணினார். அதற்காக அரும்பாடுபட அப்போதே கங்கணம் கட்டிக்கொண்டார். அவர் நன்முயற்சியும், நமசிவாய முதலியாரின் பெரு முயற்சியும் ஒன்று சேர்ந்ததால் விளைந்த தமிழ்ப்

பட்டங்கள் தான் இப்போது சென்னைப் பல்கலைக் கழகத்திலும், அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திலும் ஒளிர்கின்ற வித்துவான், புலவன், பி. ஓ. எல்., என்ற பட்டங்கள்.

## அ. சொற்பொழிவும் பெரும்புகழும்

நாவுக்கரசு சொற்பொழிவு ஆற்றுவதில் மிகவும் வல்லுநர். அவர் கல்லூரியில் சொற்பொழிவுகள் செய்து அரும்புகழ் பெற்றதுபோல், பொது மக்களிடத்தில் பல்வேறு இடங்களில் சொற்பொழிவுகள் புரிந்து பெரும்புகழ்பெற்ருர். எப்பொருளை எடுத்து விரிவுரை செய்தாலும், அவர் மிகவும் திறமையுடன், பல அரிய மேற்கோள் காட்டி, இன்னிசையையும் வெல்லும்படியான, ஒரு தனிப்பட்ட இன்பத்தை ஊட்டும் வசன நடையைப் பின்பற்றி, மக்களை இன்ப வெள்ளத்தில் ஆழ்த்தி விடுவார். அவர் தஞ்சாவூர், மதுரை, திருநெல்வேலி முதலிய பற்பல பதிகளுக்கும் சென்று, பற்பல பொருள்களைப்பற்றிச் சொற்பொழிவுகள் செய்து, தென்ஞட்டில் ஒரு சிறந்த சொற்பொழிவாளர் என்னும் பெருமை பெற்ருர். அப்பதிகளில் சைவ சித்தாந்த சமாஜங்கள் கூடியபோது, சைவ சித்தாந்தத்தின் சார்பாகவும் பல நுண்பொருள்களைப் பற்றி மிக விளக்கமாகக் கேட்டார்ப்பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்பச் சொற்பொழிவுகள் செய்தார். அவர் மிக விரைவில் தமிழ்நாட்டின் ஓர் தலைசிறந்த சொற்பொழிவாளர் எனப் பேர்பெற்ருர்.

அவரோடு பல சொற்பொழிவுகள் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரும், திரு. சச்சிதானந்தம் பிள்ளை அவர்களும் தமிழ் நாட்டிலுள்ள பற்பல நகரங்களில் சொற்பொழிவுகள் ஆற்றிப் பெரும்புகழ் பெற்ருர்கள். அம்

மூவரையும் தமிழ் நாட்டின் சிறந்த சொற்பொழிவாளர்கள் என்று பொதுமக்கள் புகழ்ந்தார்கள். அம்மூவரும் உடன் பிறந்தார் போலவும் அளவளாவி, அன்போடு சொற்பொழிவாற்றித் தமிழ்மொழியின் சிறப்பைப் பல மக்களுக்குப் பல இடங்களில் விளக்கி வந்தார்கள். நாவுக்கரசு அவ்விருவரையும் தாம் பிறந்த ஊராகிய மணிமங்கலத்திலும் சொற்பொழிவுகள் செய்யும்படி ஏற்பாடு செய்திருந்தார். பல்லாவரம், மறைமலை அடிகளையும், பூவை-கலியாணசுந்தர முதலியாரையும் நாவுக்கரசு மணிமங்கலம் வரவழைத்துப் பெருஞ் சிறப்புடன் அவர்களை வரவேற்றுச் சொற்பொழிவுகள் செய்வித்தார். மற்றும் பல புலவர்களையும் அங்கு வரவழைத்துச் சைவ விரிவுரைகளும், சொற்பொழிவுகளும் செய்வித்தார். தமிழ் மணம் கமழும், கல்வி ஒளிவீசும் ஊராயிற்று மணிமங்கலம். அவ்வூரின் தமிழ் மணப்பேர், தமிழ் நாடு முழுவதும் பரவலாயிற்று. அவ்வூரார் அனைவரும் நாவுக்கரசைத் தமிழ்த்தாயின் ஒரு செல்வப்புதல்வனாகப் போற்றிக் கொண்டாடினார்கள். அவரைப் பின்பற்றியே பற்பல பிள்ளைகள் பின்னர் ஆங்கிலக் கல்வியும், தமிழ்க் கல்வியும் செம்மையுறக் கற்கத் தொடங்கினார்கள். அவர்களுக்கு ஊக்கமளித்துக் கல்வித் துறையில் நல்வழி காட்டியவர் நாவுக்கரசே.

## ௬. நூல் ஆராய்ச்சியும், மாணவர் கூட்டமும்

நாவுக்கரசு தமிழ்நூல்களின் நுண்பொருள்களை ஆராய்ச்சி செய்வதில் பெருந்திறல் பெற்றவர். எல்லா நூல்களைக் காட்டிலும் திருக்குறள் மீது அவருக்கு இணையில்லா மதிப்பு உண்டு. அவர் ஓய்வாக இல்லத்தில் அமர்ந்திருக்குங் காலத்திலும், தமது கையில் திருக்குறளை வைத்திருப்பார். திருக்குறளைத் திருப்பித் திருப்பி வாசிப்

பதும், அதன் ஆழ்ந்த கருத்துக்களைத் திருப்பித் திருப்பிச் சிந்திப்பதும் நாவுக்கரசின் இன்பப் போக்காக இருந்தது.

"நவிறொறு நூனயம் போலும் பயிறொறும்
பண்புடை யாளர் தொடர்பு."

என்னும் திருக்குறளின் செம்பொருள் நயத்தை நன்கு அறிந்து, அந்நூலின் ஆழ்ந்த பொருள்களையே பன்முறை சிந்தித்துச் சிந்தித்துப் பெரும்புலமை பெற்றார். எந்தப் பேச்சிலும், எந்த விரிவுரையிலும், எந்தச் சொற்பொழிவிலும் திருக்குறளின் நயங்களையும், நுண்பொருள்களையும் நாவுக்கரசு சொல்லாமல் இரார். பல்கலைக் கழகத்தாரும் அவரது பெரும்புலமையைச் சிறப்பிக்க, "திருவள்ளுவர் திருக்குறள்" என்ற பொருளைப்பற்றிச் சொற்பொழிவு செய்யும்படி நியமித்தார்கள். அவர் அப்பொருளைப்பற்றி, மிக அழகாகவும், தெளிவாகவும் பேசி, மாணவர்களையும், புலவர்களையும், பொது மக்களையும் உவகை வெள்ளத்தில் திளைக்கச்செய்தார்.

நாவுக்கரசு சென்னைமாநகரில், தாம் தமிழ்மொழியில் வைத்திருந்த பெரிய மதிப்பின் பயனாக, அநேக மாணவர்களைத் தோற்றுவித்தார். பெத்துநாய்க்கன்பேட்டை முழுவதும் மாணவர்கள் தோன்றினார்கள். நாவுக்கரசு வீட்டில் எப்போதும் மாணவர் குழாமும், தமிழ்மணமும் பொலிந்தன. எப்பிள்ளை வந்து தமிழ்ப்பாடம் கேட்டாலும், அவனை உடனே மாணவனாக்கி விடுவார். வயது வந்தவர்களும், சில முதியோர்களுங்கூட அவரிடம் தமிழ்ப்பாடம் கேட்டார்கள். வாரத்திற்கு ஒரு முறை ஞாயிற்றுக்கிழமைகளில் பலவகைப்பட்ட மாணவர்கள் ஒன்று சேர்ந்து, அவரோடு சிற்றுண்டி அருந்தி உடன் பிறந்தார்போல் அளவளாவி, சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலிய காவியங்களைப் பாடங் கேட்டனர். நாவரசு

அஞ்ஞான்று மாணவர்களைத் தமக்கு ஒத்த நண்பர்களாகவே கருதி, அக்காவியங்களின் மாண் பொருள்களை அவர் உவப்புறுமாறு விளக்கிக் காட்டுவார். மாணவர்களிடத்தில் எத்தகைய வேற்றுமையும் காட்டியதேயில்லை.

சென்னை முழுவதும் நாவரசுக்கு மாணவர்கள் தோன்றினார்கள். அவர்களில் சிறந்தவர்கள், அவர் இளவல் திருஞான சம்பந்த முதலியாரும், பாரிப் பாக்கம்-கண்ணப்ப முதலியாரும், மயிலை, சிவ. முத்துகுமார சுவாமியும் ஆவார்கள். அம்மூவரையும் தொண்டைநாட்டின் பற்பல பதிகளுக்கு அவர் அழைத்துச் சென்று, பற்பல சபைகளில் சொற்பொழிவுகள் செய்வித்தார். அவர்களோடு வெளியூர்களில் சொற்பொழிவுகள் செய்வது தான் நாவரசுக்குப் பெருமகிழ்ச்சியை விளைவிக்கும். விரிவுரைகள் முடிந்ததும், அவர் அம் மூவரையும் தமது சொற்பொழிவின் அருமை பெருமைகள் எப்படியிருந்தன என்று களங்கமில்லாமல் கேட்பார். அவர்கள் எவ்வித குறைகளையும் மறையாமல் சொல்லலாம் என்றும், அதனால் ஆசிரியர் பெருமை குறைந்துவிடாதென்றும், புன்னகையுடன் தெரிவிப்பார். அவர்களும் ஒரு சிறந்த நண்பன் பெறுகின்ற உரிமையை அவரிடம் பெற்றுத் தங்கள் கருத்துக்களைத் தாராளமாகக் கூறுவார்கள்.

பல மாணவர்களைத் தோற்றுவித்ததோடு நில்லாமல், அவர் பற்பல பாடசாலைகளிலும் பல மாணவர்களைப் பண்டிதர்களாக நியமித்தார். அத்தகைய மாணவர்களில் சிறந்தவர் மயிலை, சிவ. முத்துகுமாரசுவாமி முதலியார். சுருக்கிச் சொல்லுமிடத்து, சென்னைமாநகரில் பல பண்டிதர்கள் அவர் மாணவர்களாகவோ, அல்லது மாணவர்களின் மாணவர்களாகவோ இருப்பார்கள்.

## ௧௦. சபைகளும், பத்திரிகைகளும்

நாவரசுக்குத் தமிழை வளர்க்கத் தகுந்த வழி பத்திரிகைகளே என்று தோன்றிற்று. அக்காலத்தில் சென்னையில் வாரப் பத்திரிகைகளோ, மாதப்பத்திரிகைகளோ இல்லை என்றே சொல்லலாம். இரண்டொரு பத்திரிகைகள்தான் சென்னையில் திகழ்ந்தன. அப்போது நாவுக்கரசு சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரோடு கலந்து பேசி, "செந்தமிழ்ச் செல்வி" என்ற அழகிய பெயர் அளித்து, ஓர் அருமை மாதப் பத்திரிகையைத் தோற்றுவித்தார். அதற்கு அவரே பத்திரிகாசிரியராகவும் திகழ்ந்தார். பின்னர் காலஞ்சென்ற டாக்டர் மாசிலாமணியாரோடு பேசி, "தமிழரசு" என்னும் அருமைப் பெயரோடு வேறொரு மாதப் பத்திரிகையையும் பதிப்பித்தார். அதற்கும் அவரே பத்திரிகாசிரியராக விளங்கினர். இன்னும் பல பத்திரிகைகள் சென்னையில் அவர் காட்டிய வழியைப்பின் பற்றி வெளிவரலாயின.

நாவரசுக்குப் பற்பல தமிழ் மன்றங்களைத் தோற்றுவிக்கவும் பேரவா உண்டு. முதலில், அவர் "பாலசைவ சபை" என்று ஒரு சபையைச் சென்னையில் நிறுவினர். பின்னர் மணிமங்கலத்தில் "வாகீசர் சபை" என்று ஒரு சபையை நிறுவினர். பின்னர் வாலாஜாபாத்தில் "மாணிக்கவாசகர் சபை" என்று வேறொரு சபையை உண்டாக்கினர். அச்சபையேதான் பின்னர் ஒரு பெரிய சபையாகப் பெருகலாயிற்று. அதன் பயனாகவே, "இந்து மத பாடசாலை" என்று தற்போது பெயருள்ள பாடசாலை திரு. மாசிலாமணி முதலியாரால் தோற்றுவிக்கப்பட்டது. அப்பாடசாலை இப்போது அனைவரும் புகழத்தக்க நிலையில் வாலாஜாபாத்தில் சிறந்து விளங்குகிறது. பின்னர் நாவுக்

கரசு "சித்தாந்தப் பிரகாச சபை" என்று சென்னைப் பெத்துநாய்க்கன்பேட்டையில் ஒரு சபையை உண்டாக்கினார். அச்சபையின் தலைவராகத் தாமே இருந்து, அது வரையில் எவரும் சென்னையில் செய்யாத சிவஞானபோத விரிவுரையும் பல திங்களாகச் செய்து, அதை இனிது முடித்தார். பற்பல அன்பர்களும், தமிழ் அபிமானிகளும், சைவர்களும், வைணவர்களும், கிறித்துவர்களும்கூட சென்னையிலிருந்தும், ஆலந்தூர், பரங்கிமலை, திருவள்ளூர், பல்லாவரம், சைதாப்பேட்டை முதலிய இடங்களிலிருந்தும் அச்சொற்பொழிவுகளைச் செவியினிக்கக் கேட்டு, மனம் குளிர்ந்தார்கள். இப்போது அச் சித்தாந்தப் பிரகாச சபையின் தலைவராகப் பாரிப்பாக்கம்-கண்ணப்ப முதலியார் விளங்குகிறார்.

நாவரசுக்கு அமைந்திருந்த ஆன்ற கல்விச் செல்வமும், அறிவுச் செல்வமும் பல பண்டிதர்களால் பாராட்டப் பட்டு வந்தன. அவர் பற்பல ஆராய்ச்சி நூல்கள் எழுதினால், தமிழ் நாட்டிற்குப் பெரும்பயன் உண்டாகும் என்று அவர் அபிமானிகளும், மாணவர்களும் எண்ணினார்கள். அவருக்கும் தம் வாழ்நாட்களில் அழியாப்புகழ் அளிக்கக் கூடிய இரண்டொரு ஆராய்ச்சி நூல்களாயினும் எழுதித் தமிழ் உலகுக்கு நிதியாகச் சேர்க்கவேண்டும் என்று பேரவா இருந்தது. ஆனால், எத்தகைய ஆராய்ச்சி நூலை எழுதுவதென்றும், அல்லது எத்தகைய அதுகாறும் வாராத புதிய தமிழ் நூலை எழுதுவதென்றும் அவர் சிந்தித்துக்கொண்டு இருந்தாரே யன்றி, அத்தகைய நூல் ஒன்றையும் செய்தார் இல்லை. அவர் பற்பல ஆராய்ச்சிகள் செய்து, பற்பல பொருள்கள் சேர்த்துக்கொண்டு மாத்திரம் வந்தார். அஞ்ஞான்று அவருக்கு அத்தகைய நூலை எழுத ஒய்வு ஏற்படாமையால், சின்னஞ்சிறு நூல்களையாயி

னும் எளிதில் எழுதி முடிக்கலாம் என்று தீர்மானித்தார். அவரைச் சுற்றி எப்போதும் மாணவர் குழாமும், நண்பர் கூட்டமும், பற்பல சபைகளின் அங்கத்தினர் கூட்டமும் இருக்கும். மாதர் சங்கங்களின் பெண்மணிகளும் அவரிடம் பற்பல அருமைப் பொருள்களைக் கேட்டுக் கொண்டும், பேசிக்கொண்டும், ஐயப்பாடுகளைத் தெளிவித்துக்கொண்டும், புதிய கருத்துக்களைச் சொல்ல வேண்டிக் கொண்டும் இருந்தமையால், அவர் வாழ்க்கையில் தனிப்பட்ட நேரமே அவருக்குக் கிடைப்பது அரிதாயிற்று. எத்தகையோர் விருப்பத்தையும் நிறைவேற்றும் மனப்பான்மை பெற்றவர் ஆதலாலும், இயற்கையிலேயே பெருங் கருணை பெற்றவராதலாலும், தமது வாழ்க்கையில் கிடைத்த நேரத்தை மேற்கூறியவாறு கழித்து வந்தார். எப்போது எவர் வந்து அழைத்தாலும், எவ்வித நலத்தையும் எதிர்பாராமல், செல்வத்தையும் எதிர்பாராமல், விரிவுரை செய்யவும், சொற்பொழிவு புரியவும், சபைகளில் தலைமை ஏற்கவும், மிகுந்த ஊக்கத்துடனும், மகிழ்ச்சியுடனும் ஒரு தடையும் சொல்லாமல் புறப்பட்டு விடுவார். அதுவே தாம் செய்யும் தமிழ்த்தொண்டு என்றும் எண்ணி விடுவார்; பெருநூல் எழுதுவதை மறந்தே போவார். இருப்பினும், நாவுக்கரசு சில சிறு நூல்கள் ஓய்ந்த நேரத்தில் எழுதித் தமிழர்களுக்கு ஒரு சிறிய புதுநிதியைத் தந்துள்ளார். அத்தகைய நூல்கள் மிகப் பெரிதும் தமிழ் நாடு முழுவதும் இப்போதும் பாராட்டப்பட்டு வருகின்றன. அவைகளில் சில, 'அறநெறி விளக்கம்', 'புலவர்கதை', 'திருக்கண்ணப்பன்', 'குமணன்', 'இராசராசன்', 'சண்பக வல்லி' என்பவைகளாம். அவர் அளித்த புதுப்பெயர்களாகிய பாமணிக் கோவை, உரைமணிக் கோவை ஆகிய இவையிரண்டும் மிகவும் திறம்படப் பற்பல தமிழ் நூல்களி

னின்றும் எடுக்கப்பட்டிருக்கின்றன. 'திருவருட்பா திரட்டு' 'பல்பொருட் கட்டுரை' என்னும் இரு சிறு நூல்களும் அவர் இயற்றியுள்ளார். பாடசாலைகளில் எல்லோராலும் மிகப் பெரிதும் பாராட்டப்பட்ட 'செந்தமிழ் வாசகம்' என்னும் பாடப்புத்தகங்கள் முதல் நான்கு வகுப்புக்கள் வரையில் புதிய முறையில், புதிய நடையில், மாணவர்கள் உள்ளங்களைக் கவரும்படி எழுதித் தமிழ் உலகுக்குத் தொண்டு செய்துள்ளார். இப்பாடப் புத்தகங்கள் இன்றும் இலங்கைத் தீவில் அரசாங்கத்தாரால் பெரிதும் பாராட்டப்பட்டுப் பாடப் புத்தகங்களாகவும் வைக்கப்பட்டு வருகின்றன.

## கக. தனிப்பட்ட பண்புகள்

நாவரசிடம் இயற்கையாகவே அமைந்திருந்த, அரும் பெரும் குணங்கள் பெரிதும் பாராட்டத்தக்கன. பண்டித உலகில், அவர் ஒருவரிடமும் அழுக்காறு என்னும் பெயரையே காட்டியதில்லை. மிகப் பரந்த மனப்பான்மை யுடையவராதலால், எல்லாப் பண்டிதர்களையும், உரிமை மிக்க உடன்பிறந்தார்போலவே கருதினர். ஒரு பண்டித ரைப்பற்றியும், தம்மை மறந்தும், ஒரு காலத்திலும் ஒரு குற்றமும் கூறியதில்லை; குறையும் சொல்லியதில்லை. புலவர்கள் எல்லோரையும் சாலச் சிறந்தவர்களாகவே மதித்துப் பாராட்டினர். எத்தகையோர் மனத்தையும் புண்படுத்தக்கூடிய மொழிகள் ஒன்றையும் கூறியதே யில்லை. பண்டிதர்களில் உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்பதும், பெரியோர், சிறியோர் என்பதும் அவர் அகராதியில் இல்லை. எல்லாப் பண்டிதர்களின் சொற்பொழிவுகளும், உரைநடைகளும் மிக நன்றாக உள்ளன என்றே கூறுவது அவர் வழக்கம். எல்லாச் சொற்பொழிவாளர்களையும்,

தாம் தலைமை ஏற்கின்ற எந்த இடத்திலும், மனமாரப் புகழ்ந்தே பேசுவார். கள்ளம், கபடம் கருத்தில் வைத்து, வெறும் பொய்யுரைகள் உபசாரமாகக் கூறும் வழக்கம் அவரிடத்தில் தினையளவும் இல்லை. எந்தப் புலவரையும் உயர்த்திப் பேசும் இயல்புதான் அவருக்கு அமைந்திருந்தது. பண்டித உலகில் அவருக்கு அது ஒரு தனிச் சிறப்பை அளித்தது.

தம் மாணவர்களிடத்திலும், நண்பர்களிடத்திலும் அவர் அபிமானமும், அன்பும் பெரிதும் பெறுவார். தம்மை அணுகியவர் எல்லோரையும் தமிழ் மாணவர்களாகத் திகழச் செய்வதும், பின்னர் தமிழ்ப் பண்டிதர்களாகப் பொலியச் செய்வதும், அவருக்கு இன்பப் பணியாகும். தம்மால் இயன்ற உதவியை வஞ்சனை இன்றித் தாராளமாக எத்தகைய வேற்றுமையும் இன்றி எல்லோர்க்கும் செய்வார். நன்மை செய்வதில், அவர் மத வேறுபாடு, சாதி வேறுபாடு காட்டவேமாட்டார். அருமையும், பெருமையும் ஒருவரிடம் கண்டபோது, தாராளமாகப் புகழ்வார். இத்தகைய உயர்ந்த பண்புகள் இருந்தமையால், அவரை மாணவர்களும், நண்பர்களும், தமிழாசிரியர்களும், மற்றுமுள்ள பலதிறப்பட்ட ஆசிரியர்களும் அவரைப் புகழ்ந்து, அவர் விரும்பத்தக்க நண்பர்களானார்கள். பொதுமக்கள் அவரிடத்தில் பேரன்பு செலுத்தி, அவர் பெருந்தன்மையை வியந்து பாராட்டிப் பற்பல சபைகளில், சொற்பொழிவுகள் செய்வித்து மகிழ்ச்சியுற்றார்கள். எனவே, திருநாவுக்கரசின் பெரும் புகழ் தமிழ்நாடு முழுவதும் பரவி ஒளிவீசிற்று என்பது மிகையாகாது.

தமிழ்ப்பண்டிதர் பணிகள், பாடம் போதிப்பதும், நூல்கள் எழுதுவதும்தான் என்று நாவுக்கரசு எண்ண

வில்லை. சொற்பொழிவுகள் செய்தாலும் போதும் என்றும் நினைக்கவில்லை. பண்டிதர்கள் பரம்பரையாக முதன் முதல் பிரபந்தங்கள் எழுதுவதையும், பிறகு தல புராணங்கள் இயற்றுவதையும் அவர் விரும்பவில்லை. தற்காலத்திற்கு ஏற்பத் தமிழில் உரைநடை நூல்கள் இல்லை என்று மனம் வருந்தினார்; ஆதலால், பண்டிதர்கள் பண்டைய பழக்கமாகிய எல்லாப் பொருள்களையும் பாக்களில் வரையும் பழக்கத்தை நீக்கி, எல்லா நூல்களையும் தமிழில் உரை நடையிலேயே எழுதுதல் வேண்டும் என்று எண்ணி, அவர் புலவர்கதை என்று ஒரு சிறிய நூலை ஒரு புதிய உரைநடையில் எழுதித் தமிழ் உலகுக்கு உதவினார். மதத்திலும், சாதியிலும் சில சீர்திருத்தங்கள் தற்காலத்திற்கு ஏற்றவாறு செய்தே தீரவேண்டுமென்றும் நினைத்தார். தமிழ் மொழியில் எல்லா நூல்களும் உரைநடையில் இனி வரவேண்டுமென்பது ஒரு திருத்தம். தமிழ்ப் புலவர்கள் திருமுருகாற்றுப்படையையே ஓய்ந்த நேரமெல்லாம் ஓதி, பத்தித் துறையிலேயே அழுந்திக் கொண்டிருப்பது தற்காலத்திற்குத் தகாதென்றும், அவர்களும் உலகியல் அறிவை, செய்தித் தாள்களை ஒவ்வொரு நாளும் படித்து உடன் அடைதல் வேண்டுமென்றும், ஆட்சிமுறையில் அவர்களும் பங்கெடுத்துக் கொள்ளவேண்டும் என்றும் விரும்பினார். ஆதலால், அவர்தம் மட்டில் அரசியல் அறிவும், சீர்திருத்த மனப்பான்மையும் பெற்று, அரசியல் துறைகளில் பற்பல இடங்களில் அறிவு செறிந்த, பொருத்தம் மிகுந்த சொற்பொழிவுகள் பல இடங்களில் செய்திருக்கிறார். முன்னர் இந்திய வைசிராய் சபையின் அங்கத்தினராகவும், பின்னர் மைசூர் சமஸ்தானத்தில் திவானாகவும் இருந்த, சர். ஏ. இராமசுவாமி முதலியார் அவர்களோடும், 'அரசியல் துறையில் பல சொற்பொ

கள் செய்து, தமிழ்ப் பண்டிதர்களும், வாய்ப்பு நேர்ந்தால், போராற்றல் உடைய அரசியல் வாதிகளாகவும் திகழக் கூடும் என்று அறிகுறிகள் காட்டினார். சர். ஏ. இராம சுவாமி முதலியார் நாவுக்கரசை ஒப்பற்ற சொற்பொழி வாளர் என்றும், சிறந்த சீர்திருத்த அறிஞர் என்றும் எண்ணி, அவரை வானளாவப் புகழ்ந்திருக்கிறார்.

நாவுக்கரசு பல எதிர்ப்புக்கள் எழுந்தபோதிலும், முதன் முதலாகத் தமது இல்லத்தில் நெடுங்காலமாக இருந்து வந்த தீண்டாமை என்னும் குணத்தை அறவே ஒழித்தார். ஆதித் திராவிடர்களோடு வேற்றுமை இல்லாமல் நட்புரிமை கொள்வதும், அவர்கள் சங்கங்களுக்குச் சென்று சொற்பொழிகள் செய்வதும், அவர்களோடு சிற்றுண்டி அருந்துவதும், இன்னபிற செய்கைகள் அவரிடத்தில் தோன்றிவிட்டன. திருமணத்தில் வெள்ளிப் பொருள் களும், பொற்காசுகளும், பிற விலையுயர்ந்த பொருள்களும், மணமகனுக்கும், மணமகளுக்கும், உற்றாரும், உறவி னரும், நண்பரும், ஏனையோரும் நன்கொடையாக அளிக் கும் வழக்கத்தை நாவுக்கரசு முற்றிலும் வெறுத்தார். மணமகன் மணப்பரிசு வாங்குவதையும் பெரிதும் இகழ்ந்தார். ஓர் அறிவுள்ள ஆண்மகனுக்கு உண்மையான பொருள், அறிவு, ஆற்றல், அடக்கம், பணிவு, அன்பு, கற்பு இவைகளை வுடைய, காதல் மிக்க மனைவியே அல்லாமல், பொன்னும் மணியும், கலன்களும் அல்ல என்று எண்ணி, நம் நாட்டிலுள்ள அக்கொடிய பழக்கத்தை ஒழிக்கப் பற்பல முயற்சிகள் செய்தார். தமக்குச் செல்வாக்கு மிகுந்த மாணவர்களிடத்திலும், நண்பர்களிடத்திலும், உறவினர்களிடத்திலும் கூடியவரையில் திருமண நாட் களில் மேற்கூறிய பழக்கங்களை நீக்கிவந்தார். அத்

திருமண நாட்களில் அத்தகைய சீர்திருத்தம் முதன்மை யானதெனச் சொற்பொழிவுகளும் செய்துவந்தார்.

பல ஏழை மாணவர்களும், நண்பர்களும் அவர் சொற் பொழிவின் பயனாக, ஆடம்பரமில்லாத திருமணங்கள் செய்து, கடன்காரர்களாகாமல் தப்பித்தார்கள். பல நண்பர்கள் அதிகச் செலவில்லாமல், மணங்கள் விரைவி லும் செய்துகொண்டார்கள். நாவரசு தம் இளவல், கோட்டீஸ்வரர் திருமணத்தைத் திருக்காஞ்சியில், ஏகாம் பரர் திருக்கோயிலிலேயே செய்வித்தார். தம் இளவல் பி.ஏ., எல்.டி., பட்டம் பெற்றிருந்தபோதிலும், துரைத் தனத்தில் உத்தியோகம் புரிந்த ஒரு செல்வந்தர் மகளை மணமகளாகப் பெற்றபோதிலும், கல்யாணப் பந்தலுக்கும், சங்கீதக் கச்சேரிக்கும், இன்னும் பற்பல வீண் ஆடம்பரங் களுக்கும் பணம் செலவழிக்க இடமளிக்கவில்லை. தோழிப் பிள்ளை என்பவர் அத்திருமணத்திலும், பின்னர் அவர் செய்வித்த எந்தத் திருமணங்களிலும் தலைகாட்டவேயில்லை. மணவிழாவிற்கு வந்த மக்கள் அனைவரும் மாமரத்தின் குளிர் நிழலில் அமர்ந்து, ஏகாம்பரர் ஆலயத்தில் அன் புடன் திருமணக் காட்சியைக் கண்டு களிபூத்தார்கள். அரை நாளில் திருமணம் முடியப்பெற்றது. நல்ல உண்டி யும், பண்டமும் நுகர்ந்து அவரவர்கள் அன்றே தத்தம் இருப்பிடங்கள் போய்ச் சேர்ந்தார்கள். இவ்வளவு எளிதாகவும், அழகாகவும், இன்பமாகவும் திருநாவுக்கரசு தம் தம்பியின் திருமணத்தைச் செய்வித்துப் பெரும்புகழ் பெற்றார். தம் உற்றார், உறவினர்களுக்கும் திருமணச் சீர்திருத்தத்தில் ஒரு வழிகாட்டியாகவும் விளங்கினார்.

## கஉ. மறைவும், பெரும்புகழும்

இன்னும் பல நலங்கள் தமிழ் உலகுக்கு ஆற்ற எண்ணி இருந்தார் நாவுக்கரசு. பல ஏழை மாணவர்களுக்குக் கருணையாளர்கள் மூலமாகவும், கா. நமசிவாய முதலியார் மூலமாகவும், செல்வம் மிகுந்த மாணவர்கள் மூலமாகவும், பண உதவி புரிந்து, அவர்கள் கல்வியை வளர்த்து, வாழ்க்கைத் தரத்தை உயர்த்தினர். தம் கையில் பணம் இருந்தால், பின்னுகும் என்று பிடித்திராமல், ஏழை மாணவர்களுக்குக் கருணைகூர்ந்து கொடுத்து விடுவார். தாம் பெரிய செல்வந்தராக இல்லை என்ற காரணத்தால், தக்க காலத்தில், தகுந்த மாணவர்களுக்கும், நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும் பணவுதவி செய்யாமல் இரார். பல ஏழை உறவினர்க்கும், நண்பர்கட்கும், மாதா மாதம் ஒருவருக்கும் தெரியாமல், சிறுதொகை பணம் கொடுத்து உதவிப், பெரும் புண்ணியம் புரிந்து வந்தார்.

நாவுக்கரசு மாணவர் உலகத்துக்குத் தம்மால் இயன்ற தொண்டினை ஒருவாறு ஆற்றி, மனத்திருப்தி அடைந்தார். சமூக சீர்திருத்தத்திலும், சாதிமத சீர்திருத்தத்திலும், தம் அரும்பெருந் தொண்டினை அஞ்சாமல் ஆற்றவேண்டுமென்று கங்கணம் கட்டிக்கொண்டார். ஆதலால், ஒரு தமிழ்ப்புலவனும், அரசியல் அறிவிலும் தலைசிறந்து விளங்கும் தகைமை உடையான் என்பதை விளக்க அரசியல் துறையில் சொற்பொழிவுகள் ஆங்காங்கு ஆற்றிக் கொண்டும், சீர்திருத்த மணங்கள் செய்வித்துக்கொண்டும் இருக்கையில், தாம் நெடுநாட்களாக விரும்பியிருந்த தினப்பத்திரிகையின் ஆசிரியர் பதவியையும் பெறலானர். 'ஒன்றே குலமும், ஒருவனே தேவனும் நன்றே நினைமின்'

என்னும் திருமூலர் வாக்கின் சாரத்தை நன்கு பருகினவர் நாவுக்கரசர். சீர்திருத்தம் செய்வது எத்துறையிலும் எளிதான காரியம் அன்று என்று அறிந்து, எத்தகைய குலத்தார்க்கும் மனநோய் உண்டாகாவண்ணம் மாண்புள்ள உண்மைப் பயன் அளிக்கவல்ல சீர்திருத்தங்கள் சிறிது சிறிதாகச் செய்ய முன்வந்தார். சுருக்கிச்சொல்லுமிடத்து, வேற்றுமைகள் மலிந்த இத்தமிழ் நாட்டில், ஒற்றுமை நலத்தை வேரூன்றச் செய்யவே அரும்பாடுபட்டார்.

தமிழ் நாடெங்கும் செப்பரிய ஒப்பில்லாச் சொற்பொழிவாளர் என்றும், சீர்திருத்தத்துறையில் அஞ்சா நெஞ்சும், போராற்றலும் பெற்ற வல்லாளர் என்றும், தமிழாசிரியர் பீடத்தை உள்ளவாறு சிறக்கச் செய்த பண்டிதர் என்றும் அவர் புகழ்பெற்றுச் சிறந்து வாழும் நாளில், அந்தோ! வந்தது எதிர்பாராத, என்றும் நீங்காத இன்னல்!

1931-ம் ஆண்டு மேமாதம், சனிக்கிழமையன்று திருநாவுக்கரசு திடீரென மார்புநோய் வரப்பெற்றார். அன்று பகல் அவர் இம்மண்ணுலக வாழ்வை நீப்பார் என்று அவர் இளவல், கோட்டீஸ்வரர் ஒரு வைத்திய நிபுணரால் அறியப்பெற்றார். அப்போது அவர் உள்ளம் உருகியபோதிலும், அவரும் தம் தமையனாரைப்போலவே அஞ்சா நெஞ்சினராய், ஊக்கத்தை இழக்காமல், தமது இரண்டாவது தமையனார் திருஞானசம்பந்த முதலியாரை அலுவலுக்குப் போகவொட்டாமல் தடைசெய்வித்து, திருநாவுக்கரசிடம் உடனே வரும்படி ஆள் அனுப்பினார். அவர் வந்ததும், கோட்டீஸ்வரர் தெருவாயில் கதவண்டை நின்றவண்ணமே, அவரை நோக்கி, "அப்பா! ஒன்றும் பயமில்லை. அண்ணா மிகவும் களைத்திருக்கிறார்! அவரைக்

கண்டு அழாதே! ஆபத்து வந்துவிடும்! அண்ணு பக்கத்தில் அமர்ந்து கொள்" என்று மெல்லிய குரலில் கூறினர். ஞானசம்பந்தம் திடுக்கிட்டார்; என் செய்வதென்று அறியாமல் திகைத்தார்! ஆபத்து வந்துவிட்டதா என்று நெஞ்சம் துடித்தார்! இருப்பினும், முருகன் அருளை மனத்தில் வேண்டி, மெல்ல நடந்து, அருமைத் தமையனரிடம் அணுகி, அவர் திருமுகத்தை ஒருமுறை பார்த்தார். நாவுக்கரசு ஞானசம்பந்தத்தைச் சிறிதுநேரம் ஒரே பார்வையாகப் பார்த்து, மௌனம் பூண்டார். அப்பொழுதே நாவரசு தமது இறுதிக்காலம் வந்துவிட்டது என்று முற்றிலும் அறிந்துவிட்டதாகவே காணப்பட்டார். ஆனல், அவர் ஒரு மொழியும் தம் இளவல்களிடமும் சொல்லவில்லை. ஏனையோரிடமும் பேசவில்லை. ஆண்டவன் அருளையே உள்ளத்தில் எண்ணியிருந்தார். சம்பந்தம் உடைந்த உள்ளத்துடன், தமையனரை உருகிய பார்வையுடன் நோக்கி, "அப்பா! தேகநலம் எப்படி இருக்கிறது?" என்று வினவினர். நாவரசு, "ஒன்றுமில்லை; மூச்சு திணறுகிறது." என்றார்.

பின்னர் நாவுக்கரசு ஒன்றும் சொல்லாமல், பக்கத்தில் உள்ள அனைவரையும் மௌனத்துடன் பார்த்தவண்ணமே இருந்தார். இளவல்கள் இருவரும் அவர் பக்கத்தில் அமர்ந்தனர். அவர் சிறிய தந்தை, டாக்டர் மாணிக்க முதலியார் அவர் முகத்தருகே நின்று அவர் மார்பைத் தடவிக்கொண்டிருந்தார். மரணமென்பது இயற்கை என்றும், அதற்கு அஞ்சுதல் பேதைமை என்றும், அப்போதுதான் ஆண்டவன் நினைவு பூரணமாக இருத்தல் வேண்டும் என்றும், சுகமரணம் புண்ணியர்களுக்குத்தான் கிட்டும் என்றும், முன்னர் அவர் அடிக்கடி சொல்வதுண்டு. அவர் சொல்லியபடியே, அவர் மரணத்திற்கு

அஞ்சாமல், ஆண்டவன் அருளையே உரமாக மனத்தில் நினைத்தார். அப்போது அவர் தங்கை கருணாம்பிகை அம்மை அவரை நோக்கி, "அப்பா! சிறிது பால் அருந்துங்கள்; களைப்பு நீங்கும்" என்று கூறினார். நாவரசு குறிப்பால் அதற்கு இசைந்தார். ஒரு வெள்ளிக்கோப்பையில் இன்னமுதைக் கொணர்ந்து தம் தங்கை கொடுக்கையில், அதை அருந்தியவுடனே, எல்லோரையும் ஒரு முறை பார்த்தார். பார்த்தவண்ணமே நாவுக்கரசு ஒரு கணத்தில் இவ்வுலக வாழ்வை நீத்தார். அதுபொழுது, அவர் இளவல்களும், தங்கையும் தங்களை அறியாமலேயே, அலறி அழாமல், "முருகா! முருகா!" என்றே கடவுளின் திருநாமத்தை ஓதினார்கள். திருநாவுக்கரசு முருகன் திருவருளை அடைந்துவிட்டார். உடனே எழுந்தது ஆழ் கலத்தன்ன உற்றார், உறவினர்களின் அழுகை ஒலி!

நாவுக்கரசு மண்ணுலகை நீத்தார் என்ற செய்தி சென்னைமாநகரம் முழுவதும் பரவிவிட்டது. துண்டுப் பிரசுரங்களும், பெரிய விளம்பரங்களும் புலவர் மரணத்தை எல்லோர்க்கும் அறிவித்தன. பண்டிதர்களும், மாணவர்களும், நண்பர்களும், செல்வர்களும், பலப்பல பெரிய உத்தியோகஸ்தர்களும், பலவகைப்பட்ட சாதி மக்களும், ஆதித்திராவிடர்களும், சென்னைப் பெத்துநாய்க்கன் பேட்டை, செண்ட் ஜேவியர் தெருவில், சினிமா கொட்டகையின் அருகே கூட்டம் கூட்டமாகக் கூடிவிட்டார்கள். எங்குப்பார்த்தாலும் அழுகுரலும், நாவுக்கரசைப் புகழ்கின்ற ஓசைகளும்தான் உண்டாயின. அன்று மாலை ஓர் அழகான மலர்கள் நிறைந்த விமானம் அமைக்கப்பட்டது. ஆயிரக்கணக்கான மக்கள் கூடிவிட்டார்கள். அவர் பிணக்கோலம் தமிழ் மணக்கோலம்போல் காணப்பட்டது. அபிமானிகளும், அன்பர்களும், பொது

மக்களும் அவர் முகப்பொலிவை அந்நிலையிலும் கண்டு களிகூர்ந்து, தமிழ்த்தொண்டர் சாய்ந்தார் என்று சொல்லிக்கொண்டு மயானம் வரையில் சென்றார்கள்.

நாவுக்கரசின் மரணச் செய்தியைக் கேட்ட பல்லாவரம், மறைமலை அடிகள் எய்திய மனத்துயரம் இத்தன்மைத்தென்று ஏட்டில் எழுத முடியாது. அவர் நாவுக்கரசைத் தம் மாணவராக மாத்திரம் நினையாமல், தமது தலைமைக் காதற் புதல்வனாகவும் கருதி வந்தமையால், அவர் மயானத்தில் நாவரசைப்பற்றிச் செய்த சொற்பொழிவின் பெருமையையும், கண்ணீர்விட்டுக் கனிவு காட்டிய உரிமையையும் கண்டார் அனைவரும் கண்ணீர் விட்டார்கள். சுமார் இரவு 9 மணிக்கு மயானக் காட்சி தமிழ்மேடையின் சொற்பொழிவுக் காட்சிபோலவே தோன்றிற்று. நாவரசு நனி போற்றிய தமிழ் அன்னையும் கண்ணீர் உகுத்தாள் என்று சொல்லுமாறு அவர் பிரிவு தோன்றியது. பல அன்பர்களும், திரு. வி. கலியாண சுந்தர முதலியார், டாக்டர் நடேச முதலியார், எஸ். எஸ். ஆனந்தம் பிள்ளை, தண்டபாணிப் பிள்ளை ஆகிய இவர்களும் சொற்பொழிவுகள் செய்து, நாவுக்கரசின் தூய ஆன்மா சாந்தி பெறுமாறு இறைவன் திருவருளை வேண்டினார்கள். அவர் மாணவர்களில் ஒருவராகிய சோமங்கலம், கிருஷ்ணசுவாமிப் பிள்ளை என்பவர் ஆங்கிலத்தில் சுருக்கமான, உருக்கமுள்ள சொற்பொழிவு செய்து, தமது நன்றியைச் செலுத்திக் கொண்டார். இரவு 10 மணிக்குமேல், தமிழ்ப்பெருந்தொண்டராக விளங்கிய திருநாவுக்கரசைப் பிரிந்து, உற்றார் உறவினர், நண்பர்கள் ஆகிய எல்லோரும் சொல்லவொண்ணு மனவருத்தத்துடன் வீடு திரும்பினார்கள். அத்தகைய தமிழ்ப்பெரியாரை இழந்தாள் தமிழ் அன்னை.

நாவரசுக்கு இரண்டு இளவல்கள் இருக்கிறார்கள். மூத்தவர் மணி. திருஞானசம்பந்தம். இரயில்வேயில் ஓர் உயர்ந்த பதவியில் இருந்து, நன்கொடை பெற்றுச் செந் தமிழ்ப் புலவராயும், பற்பல நூல்களின் ஆசிரியராகவும், சிறந்த சொற்பொழிவாளராகவும் விளங்குகிறார். இளைய வர், கோட்டீஸ்வரர். செகந்தராபாத்தில் மாபூப் காலேஜ் பிரின்சுபாலாக விளங்குகிறார். ஆங்கிலத்திலும், தமிழிலும் சொற்பொழிவு செய்வதில் ஆற்றல் பெற்று இலங்குகிறார். நாவுக்கரசின் ஒரே புதல்வன், சபாரத்தினம் என்பவர் எம். ஏ., எல். டி., பட்டம்பெற்றுக் கல்கத்தா நகரில் துரைத்தனத்தில் ஒரு ஆபீசர் பதவியைப் பெற்றுச் செழுந்திரு வாழ்வில் திளைத்து வருகிறார். அவர் மருமகள் "சகுந்தலா" என்னும் கல்விக்கரசி பி.ஏ., எல்.எடி., பட்டம் பெற்றுப் பெண்மக்கள் கல்வியழகை ஒளிபெறச் செய்து, உயர்புகழ் பெற்று வருகிறார். அவர் முதல் மருகர், மாணிக்கம் என்பவர் பி.ஏ. பட்டம் பெற்றுச் சேலத்தில் ஒரு பெரும் பதவியில் ஒளிர்கிறார். மற்றொரு மருகர், பஞ்சாட்சரம் என்பவர் சென்னையில் ஓவர்சியர் உத்தியோகம் பெற்றுச் சிறந்த நிலையில் திகழ்கிறார். நாவரசுக்கு இன்னும் இரண்டு புதல்விகள் திருமணம் செய்யப் பெறாமல் இருக்கிறார்கள். அவர் மாணவர்களில் எல்லோரினும் சிறந்த மாணவர், தமிழ்ப்பேராசிரியர், பாரிப்பாக்கம், கண்ணப்ப முதலியார். அவரே நாவரசரின் முதல்மாணவரும் ஆவார். அவர் சைவ விரிவுரையும் தமிழ் விரிவுரையும் ஆங்காங்குப் புரிந்து, நாவுக்கரசின் பெரும்புகழை இன்னும் பேசிக்கொண்டும், போற்றிக் கொண்டும், நன்றி பாராட்டிக்கொண்டும், நல்வாழ்வு பெற்றுத், தமிழ் உலகில் தாமும் பெரும்புகழ் பெற்று விளங்குகிறார்.

இணைப்பு :

## அன்னையார் பிரிவாற்றுமை

ன் பாடல்)

அன்னாய் ! அன்னாய் ! தன்னே ரில்லாய் !
மன்னிய அன்பிற் றுன்னிய அன்னாய் !
அளப்பரு மருமையைக் கிளத்த லியாங்ஙனம் ?
அன்பே ! அன்பே ! அயர்வறும் அன்பே !
முல்லை முகையெனத் துல்லிய மூரலுங்
கருணையுங் கறியுங் காழ்ப்பு முதலா
மருவிய வறுசுவை தூறுமித் தீவிய
முப்பழத் தோடு முதிர்சுவை வாய்ந்து
தப்பறு கேள்வி துப்பமை புலவன்
நூல்வழி யட்டுப் பால்கெழுப் படைத்த
கொழுவிய பாகர், செழுவிய அன்னாய் !
பின்னில தாரே இன்புறப் படைக்கினும்
இனிமையு மின்றே ; கனிவு மின்றே.
இன்முகங் காட்டிப் புன்னகை காட்டி
நயமொழி கிளந்து பயங்கெழ விழைஇ
ஆரா அன்பின் தீரா யாக்கை
நாள்வாய் நோக்கி நன்மகிழ் கொளீஇ
தாயே நீயிடு ஏயாப் புற்கைக்
கிணையோ ? இணையோ ? கனிக்குங் காலே.
நல்லியாழ் பயின்ற பல்லிசைப் புலவன்
கையறு முறைமையிற் பெய்திடும் பண்ணினும்
போக்கறு பனுவ லாக்குறு பாவலன்
உலகிய லறிவும் புலனெறி வழக்கு
மொப்ப நாடிச் செப்பிய தண்டமிழ்
செழுவிய முழுமுதல் வழுவறு நூலின்
பல்வகைச் சுவையுங் கல்வி கேள்வி
நிரம்பி நட்பின் வரம்பிக வாத
கெழுதகைக் கேண்மையர் பழுதுகக் கழறும்
மொழியினும் அம்மே ! கழிசிறப் புடைத்தே
மதுரமு மன்புந் ததும்பு மின்மொழி
பரவை நுண்மறைப் பரப்பெலாங் கனிக்கினு

நிரவிய அன்பின் நிகழ்ச்சிக ளனைத்துங்
கூறற் பாற்றோ? கூறற் பாற்றோ?
கடனீர் பரப்பி னிடைநீர்த் திவலைக
ளெண்ணமை கால மண்ணினின் வைகி
நின்போ லோருரு பொன்னினுற் சமைத்தே
ஆலய மமைத்துக் காலையு மாலையும்
உச்சி முதலா வுள்ளங் கால்வரை
அழலிடைப் பட்ட இழுதையினுருகி
எங்குங் கண்களா வெங்கும் வாய்களா
எங்குங் கைகளா வெழில்பெறப் பெற்று
நோக்கி நோக்கித் தூக்கிற் பைந்தமிழ்
பல்வகை மாலை நல்வகை புனைந்து
குடந்தம் பட்டுத் தடங்கை கூப்பித்
தொழுதும் வாழ்த்தியுங் கொடுமலர் சிதறியு
மாடியும் பாடியு மாற்றினு மதுதான்
ஒருநா ணீபெறு பெருநவை யதனிற்
கால்கூ றுக்குங் கைம்மா றன்றே.''

மேற்கூறிய செய்யுளில் நாவுக்கரசு தம் அன்னையின் அன்பின் பெருக்கை விளக்கிக் காட்டும் அழகையும், அத்தகைய அன்னைக்கு மைந்தன் எத்தகைய பணிசெய்தல் வேண்டும் என்பதை எடுத்துக்காட்டும் அழகையும் கூர்ந்து கவனிப்போர்க்குப் பெருமகிழ்ச்சி உண்டாகும் என்பதில் ஐயமில்லை. அச்செய்யுளின், "அளப்பரு மருமையைக் கிளத்த வியாங்ஙனம்" என்று துவங்கி, "மதுரமு மன்புந் ததும்பு நின்மொழி" என்று முடியும் வரையில் உள்ள பொருட்சுவைகளை நுகர்தல் மிகவும் நன்று. இஃதன்றியும், அருமை அன்னையை அன்புள்ள மகன் எங்ஙனம் வணங்குதல் இயலும் என்பதைக் குறிக்கும், "கடனீர்ப் பரப்பி னிடைநீர்த் திவலைக" என்ற தொடக்கத்திலிருந்து, "கால்கூ றுக்குங் கைம்மா றன்றே" என்று முடியும் வரையிலுள்ள பொருட்சுவைகளை ஆழ்ந்து

நினைப்போர்க்கு அளவிகந்த இன்பம் பெருகும். இத்துணைய ஆன்ற கருத்துக்களையும், சிறந்த பொருள்களையும், உயர்ந்த மனோபாவனைகளையும், செவ்விய தமிழ்ப் புலமையையும், அச்சிறு வயதிலேயே எவரும் வியப்புறப் பெற்றார் நாவுக்கரசு. அவர் தமிழறிவின் முதல் ஒளியை மேற்கூறிய அருமைப் பாட்டிலேயே நன்கு காணலாம். அவர் இத்தகைய பாக்கள் பலவற்றைப் பற்பல பொருள்கள் வைத்துப் பல்வேறு இடங்களில் பின்னர் யாத்துள்ளார்.

நாவரசர் இறந்த பதினாறாம்நாள் சென்னைத் தொண்டைமண்டல உயர்தரப் பாடசாலையில் ஒரு பெருங் கூட்டம் கூடிற்று. அன்றொன்று பல்லாவரம் மறைமலை அடிகளே தலைமை வகித்தார். பல புலவர்களும், நண்பர்களும், அன்பர்களும், நாவரசின் பெருமையையும், புலமையையும், ஆற்றலையும், தொண்டையும் புகழ்ந்து பேசி, வந்தவர் உள்ளங்களை உருக்கினார்கள். அப்போது நாவரசுமீது "கையறு நிலை" ஒன்று அச்சிட்டு மக்களுக்கு வழங்கப்பட்டது. அக்கையறு நிலையில் பல்லாவரம் மறைமலை அடிகள் முகவுரையாக உரைநடையில் நாவுக்கரசைப்பற்றிச் சிற்சில கனிமொழிகள் உருக்கமான நடையில் எழுதியிருக்கிறார். இன்னும் பல புலவர்களும், அவரைப்பற்றி மிக உருக்கமாகவும், அழகாகவும் அருமைப் பாடல்கள் பாடியிருக்கிறார்கள். அவைகளில் சிற்சிலவற்றை மட்டும் இங்கே குறிக்கின்றோம்.

# இரங்கற்பாக்கள்

கற்றார்தங் கண்ணானாய் கல்லார்தம் உணர்வானாய் களைக ணாகி
அற்றார்தம் உறவானாய் திருநாவுக் கரசானாய் அந்தோ நின்னை
முற்றாத நடுவயதிற் பற்றியே கொண்டகன்ற மூடன் றன்னை
வற்றாத மூதறிஞர் நடுவனெனச் சொற்றனரால் வகையி னாய்ந்தே. 1

தந்தையார் ஏங்கியழத் தம்பியரும் கலக்கமுறச் சஞ்ச லத்தால்
பந்தமுறு நின்பாலர் பரிதவிக்க மாணவரும் பரிவி னேங்க
அந்தமுறு பூதவுடல் நீத்தனையால் திருநாவுக் கரசே யிஃது
விந்தையினும் விந்தையதாம் இறைவனடி கலந்தனையே விதியின்
மாண்பே. 2

கா. நமசிவாய முதலியார்.

எண்ணரிய நின்செயலை யெண்ணியிறு மாந்திருந்தேம்
வெண்ணெய்திரள் சமயத்தில் விரிந்ததொரு தாழியொத்தாய்
நண்ணரிய கீர்த்தியினை நாணில்லைப் பதனிலமர்
திண்ணியநல் லறிவமைந்த திருநாவுக் கரசோயே. 3

வல்லை, சண்முகசுந்தர முதலியார்.

நாவுக் கரசே நரைதிரைமூப் பேருமுன்
தேவுக் கரசடியைச் சேர்ந்திருத்தல்—பாவுக்
கரசே அறிவென் றகன்றனையோ ஐயா
உரைசெயா தோரிமையில் உற்று. 4

மணிமங் கலமெழு வான்கதிர் வேளாண் மதிதமிழர்
தணிபொழில் சைவப் பயிராண் டீடருணி சார்ந்தவர்சொல்
வணிமழை தொண்டுரு ஆருயிர் நண்பாய் அமரரசே
கணமறை வுற்றதென் காண்தமிழ் அன்னை கலங்குவதே. 5

திரு. வி. கலியாணசுந்தர முதலியார்.

ஆற்றல்மிகுங் கேண்மையினால் நச்சினார்க் கினியனுநீ
அரன்சீர் பாடும்
ஏற்றமுறு மடியார்க்கு நல்லாய்நீ! இளமையிலே
ஏய்ந்த கல்வி

சாற்றிவிளம் பூரணனீ, யெங்கண்மனப் புரவியுனைத்
தரித்த லாலே
தோற்றமா ரும்பரிமே லழகனுநீ எமதுரிமைத்
துணைநீ யம்மா ! 6

தமிழ்மாது தனதொருகண் மணியையிழந் தனளந்தோ.
தமிழ்நா டென்றும்
இமிழ்திரைசூழ் நாடுதனை தரும்பெறலோர் மகவை யிழந்
தினைவ தன்றோ !
அமிழ்துமிழ்சொற் பொழிவாற்று மேடையெலாம் பொலிவிழந்த
தாயிற் றம்மா !
தமிழரசு தந்தையிழந் ததுதிருநா வுக்கரசு
சார்பு தீர்ந்தே. 7

அ. வரதநஞ்சைய பிள்ளை.

நடையெழுது வதில்வல்லாய் நல்லவிலக் கணமுள்ளாய்
நவையே யில்லாம்
உடையழகும் நடையழகு முரையழகு மொருங்கமைந்த
யுயர்கேள் விக்கு
விடைவிளக்க முறப்பகரும் மெய்ம்மதிசே ரையாவீண்
விகற்பஞ் செய்யுங்
கடையருக்கும் மதிபுகட்டுங் கருணைவள்ளா லுனையினிநான்
காண்ப தென்றோ. 8

வி. ஆறுமுகஞ் சேர்வை.

## ஆசிரியப்பா

நாவலர் கனியே ! நல்லவர் மகிழ்வே !
பாவலர் விருந்தே ! பண்டிதர் அமுதே !
என்னரும் தவமே ! என்தனிக் களிப்பே !
பன்னரும் புகழே ! பல்கலை விளக்கே !
தன்னிக ரில்லாத் தனிக்கவி அழகே !
கன்னலை வென்ற கனிரசத் தெளிவே !
கருணை மலரே ! கனிமுக வமுதே !
திருநா வென்னுந் தீந்தமிழ்ச் சுவையே !

என்குரு மணியே ! எழில்மிகு மணியே !
மன்னுயிர்க் கெல்லாம் இன்செயல் புரிந்தே
மக்கள் வாழ்தல் மாண்கட னென்ற
தக்கோய் உன்றன் தண்மொழி யுன்னி
என்னுளந் தன்னில் உன்னுரு வமைத்து
என்றும் தொழுவேன் உன்னை யானே. 9

மணி. திருஞானசம்பந்த முதலியார்.

கருமையிலு மழகுண்டு கடுங்கோபந் தன்னிலுமோர்
கனிவு முண்டால்
உரிமையுட னடிக்கையிலே யணைப்பதுவுந் தானுண்டால்
உறுக ளத்தே
பெருமைசேர் பேச்சுண்டு பேரறிஞர் புகழுண்டுன்
ஆற்றல் என்னே
இருமையிலு முன்வாழ்க்கை ஏற்றமுடைத் தென்றேயா
னியம்பு வேனே. 10

சேலை. சகதேவ முதலியார்.

கடன்மடை திறந்த தேகொல் கற்பக நற்செந் தேன்கொல்
இடம்படு விண்ணின் றூற்றும் இன்பநன் மாரி கொல்லோ !
மடம்படு மனக்கர் நீக்கி மதிதரு முன்வாக் கென்னுந்
திடம்படு புகழி னோங்குன் றீஞ்சொலைக் கேட்ப தென்றோ ? 11

பாரிப்பாக்கம். கண்ணப்ப முதலியார்.